# நகரத்தார்

திங்கள் இதழ்

61, D, உசுமான்சாலை - சென்னை-17

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

சௌமிய-பங்குனி — மார்ச்-1970

ஆசிரியர்
புலவர்நாகசண்முகம்

பரிந்துரையாளர்
எஸ். பிஎல். பழநியப்பா பி.ஏ., பி.எல்.

குறிப்பு ஒன்று — பேரேடு பன்னிரண்டு

## எண்ணம்

நம் இதழின் இரண்டாவது குறிப்பு, சாதாரண ஆண்டு தைத் திங்கள் முதல், தமிழ் மாதம் தோறும் முதல் நாளன்றே தவருமல் வெளிவரும் என்பதனை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்ருேம். முதல் ஆண்டில் தொடர்ந்து வந்த நட்டத்தை ஈடு செய்யவும் இதழின் பக்கங்களை மேலும் கூட்டவும் எவ்வாறும் தாமதம் நேராது இதழ்கள் வர வழிவகை செய்யவும் பல பெருமக்களின் கருத்துப்படி ஆண்டுச் சந்தாத் தொகையை ரூபாய் ஆறு ஆக உயர்த்தி உள்ளோம்.

தரம், தாமதமில்லாமல்வெளிவருதல் இரண்டில் முதல் ஆண்டில் பல்வேறு இன்னல்களுக்கிடையே முன்னதை மட்டும்தான் காக்க முடிந்தது. உங்கள் அனைவரின் நல்ல ஒத்துழைப்புடன் இனி எப்போதும் பின்னதையும் காப்போம்.

தொழிலுக்கு முடிவு உண்டு. சேவைக்கு முடிவு இல்லை. நகரத்தார் திங்கள் இதழினை நடத்துகின்ற பணியினை முழுக்க முழுக்க சேவையாக எண்ணியே மேற்கொண்டுள்ளோம். பெருமக்கள், தாய்மார்கள், அன்புச் சகோதரர்கள், சகோதரிகள் அனைவரும் ஏதோ எவரோ மேற்கொண்டுள்ள முயற்சி என்று எண்ணுமல் தங்கள் தங்கள் சொந்த முயற்சியாக, ஏடாக, எண்ணி முழு அளவில் உறும்பினர் கட்டணம், விளம்பரம் என்ற இரு துறைகளிலும் உதவிகள் நல்கி நம் இதழை நம் வரலாற்றில் பொன் இதழாக ஆக்கித் தருமாறு அனைவரையும் பணிவன்புடன் வேண்டுகின்ருேம்.

## குறிப்பு இரண்டில், முதல் பேரேட்டில், தை: இதழில்! இடம் பெறுவன

### நான்கு விழாக்கள்

தேவகோட்டை உ. செமெ. அண. அண்ணுமலை செட்டியார் கலைக் கல்லூரித் தொடக்கவிழா.

உதயம் நூல் வெளியீட்டுவிழா.

நகரத்தார் வரலாற்று நூல் வெளியீட்டுவிழா.

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் எழுத்துப் பணிக்கு வெள்ளிவிழா.

ஆகிய விழாக்கள் பற்றி, ஆசிரியர் எழுதும் வர்ணனைக் கட்டுரை.

நகரத்தார் வரலாற்று நூல் வெளியீட்டு விழாவில் மேன்மை மிகு அ. மு. மு. அருணுசலம் செட்டியார் அவர்கள் ஆற்றிய உரையின் முழு வடிவம்.

### ஊர்கள் தோறும் சங்கங்கள்

மேன்மைமிகு வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்களின் கட்டுரை.

### ஜப்பானில் சில நாட்கள்

மேன்மைமிகு காரைக்குடி எம். தெய்வராயன் அவர்கள் வரையும் பயணக் கட்டுரை.

### கேள்வி? பதில்! செய்தி மலர்

### தேன் துளிகள்! நாட்டு நடப்பு

மற்றும் ஒன்று, கதைச் சுருக்கத்துடன்

### பழனிமலைக் காவடி

இன்னும் பல!

### இன்றியமையாத குறிப்பு

தை ஒன்றில் இதழ் தவருமல் வெளிவரும்

தொடர்ந்து திங்கள் தோறும் முதல் நாள் வெளிவரும்




## வரம் தந்து நீ அருள்வாய்!

இறைவா!

உன் ஆலயத்து மணி நாதத்தில் பேதமில்லை.

அருள் பொழியும் விழிகளிலே மாற்றமில்லை.

ஆற்று நீரின் தன்மையிலே வெம்மையில்லை.

மலர்களின் மென்மை வன்மையாக வில்லை.

இறைவா!

உன் இதயத்துப் பெருவெளியில், அருள்ஒளியில், அன்பில் மாற்றம் ஏன்?

அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் புரிந்த பெருமானே!

அந்த விளையாடல்களுக்கு இலக்கானவர்கள் தம் வாழ்வில் இடைநிலையில் இடர்ப்பட்டிருக்கிறார்கள்; சோதனை வயப்பட்டிருக்கிறார்கள்; வேதனைப் புயலிற் சிக்கித் தவித்திருக்கிறார்கள்.

ஆனால், முடிவில் இன்பச் சாதனைகளுக்கல்லவோ காரணமாக விளங்கியிருக்கிறார்கள்!

உனது சொர்க்கம் என்ற சன்னிதானத்தில், முத்தியென்ற முத்துக்களை அல்லவா பரிசாகப் பெற்றிருக்கின்றனர்!

வாழ்வாங்கு வாழ வைப்பவனே! தாழ்வகற்றும் தயாபரனே!

புதிய திருவிளையாடல்களை, வேதனை தரும் நர்த்தனங்களை, விளங்காத புதிர்களை நீ எப்போது துவக்கினாய்?

தில்லையின் எல்லையிலே ஆடுகின்றாய் என்பர். அன்பின், அறத்தின், அழகின், கருணையின் எல்லையிலே ஆடுகின்றாய் என்றல்லவோ எண்ணி யிருந்தோம்!

அப்பா! என்று மட்டும் அழைத்திடில், எங்கே உன் பெருங் கருணையில் குறை நேர்ந்துவிடுமோ என்று எண்ணிய எம் முன்னோர், உன்னையே அன்னையாகவும் கண்டனர்.

தாயினும் சாலப் பரிந்துநீ காப்பாய் என அன்னைக்கு மேலாகவும் உன்னை நினைத்தனர்.

அது பொய்யில்லை. அது என்றும் பொன்றாத மெய் என்பதை உணர்த்துவதுபோல, உன் உடலிலே பாதியினை அன்னைக்கு நல்கினாய்! அன்னையும் அப்பனும் நீயே யானாய்!

படைப்பான் பிரமன்; காப்பான் திருமால்; அழிப்பாய் நீ என்று சொல்வர்.

உன் கோபச் சிரிப்பதனில் கொடுமைகள் அழியும். உன் கூரம்பால் கொடும்பாவங்கள் மறையும். சினந்த உன் பார்வையால் சிறுமைகள் ஒழியும்.

நீ அழிப்பாய் என்பதனை இவற்றை அழிப்பாய் என்றே நாங்கள் கொண்டோம்.

முக்காலும் அறிந்த முதல்வனாய், முப்பாலாய், முக்கனியாய், இசையாய், இசைப்பயனாய், எழிலாய், இரு குழந்தைகட்குத் தந்தையாய், எண்ணற்ற குழந்தைகட்குத் தாயாய் விளங்குகின்ற விமலனான நீ நன்மையை அழிப்பவன் என்பதனை எவ்வாறு எண்ண இயலும்?

இறைவா!

ஆனால், நீ அழிப்பவன் என்பதனை உறுதிப்படுத்திட எண்ணியவன்போல, எங்கள் சிந்தையெல்லாம் மயங்க, நாங்கள் செய்வதறியாது கலங்கச் செயலொன்று புரிந்துவிட்டாய்!

அடையாற்றின் கரைதன்னில், அழகுமிகு மாளிகையில் பிறந்த பிள்ளை; செட்டிநாட்டரசரின் செல்வக் குமரர்; முத்தாகி வந்த முதல்வர்; சைவத்தின் சத்தான குடும்பவழித் தோன்றல்; அடக்கமாய், அன்பாய்ச் செல்வச் செருக்கற்ற செல்வமாய் வாழ்ந்த தங்கம்; எளியவர்க்கு இனியவராய், எல்லார்க்கும் நல்லவராய் வாழ்ந்த இளவரசர் என்ன செய்தார்?

இறைவா!

கொடுக்கப் பிறந்த குணக்குன்றே! எடுக்கும் செயலை ஏன் புரிந்தாய்?

பாட்டின் பொருளாய் ஆனவனே! செட்டிநாட்டின் செல்வனை ஏன் மறைத்தாய்?

ஆட்டுவித்து மகிழ்கின்றாய்! ஆடுகின்றோம். அழவைத்து மகிழ்வதேனோ?

சிறந்தவனை உன்னவனாய் அடைந்ததனால், நீ சிரிக்கின்றாய்! நாங்கள் அழுகின்றோம். நீ ஆடுகின்றாய்! நாங்கள் வாடுகின்றோம்.

முழுமுத்தைக் கவர்ந்து சென்றாய்! இளமுத்தை எழில்முத்தாடும் மழலை முத்தொன்றை, அரசர் குடும்பத்திற்கு, இளவல் இராமசாமி இல்லத்திற்கு இரங்கி ஈந்தருள்வாய் என வேண்டுகின்றோம்.

எல்லாம் வல்லவனே! இவ் வரத்தை நீ அருள்வாய்!

# நகரத்தார்

# குமாரராஜா



# நினைவுமலர்



அலையிடைப் பிறவா முத்து
அண்ணுமலையிடைப் பிறந்த முத்து
நகரத்தார் நலம்பெற் ருேங்க
நல்லன செய்யும் முத்து
அம்முத் தீன்ற முத்து
எத்திசையும் ஒளிவிளங்க
இருந்த இளம்முத்தே! எங்கள்
சித்தமெலாம் கலங்க,
சிவஞர் தம்மனம் களித்து
இவ் வுலகம் சிறக்க
என் சபைக்கு நீவருக
என்ற ழைத்தார்
பெரியவரின் அழைப்பேற்று,
பேருலகம் நீசேர்ந்தாய்!
பொன்னுலகம் சேர்ந்த
புகழ் மணக்கும் திருமகனே!
பொன்மனத்தாய் உனைப்போற்றி
பொன்மலர்கள் படைக்கின்ருேம்.



## அன்னைக்கு அஞ்சலிகள்

வலக் கரம் கொடுப்பது
இடக் கரம் அறியாவண்ணம்
கொடுப்பதே கொடை என்பார்கள்
அவ்வகை வாழ்ந்த அன்னை
அருட்சுடரான தெய்வம்
அவர் ஆணைதனை நோக்கி
அன்பிற்கு மிக ஏங்கி
எண்ணற்ற பிள்ளைகள் இங்கிருக்க
ஒருபிள்ளைதனைத் தேடி ஓடிவிட்டார்
பரமன் பாதமலர் தனையடைந்த
பண்புமகன் அருகினிலே வாழ்ந்திடுவார்
அன்னை அவர்புகழ் போற்றி
அண்ணல் மலர்தனைப் படைப்போம்



Raj Bhavan
Madras-20

Kumararajah M. A. M. Muthiah Chettiar of Chettinad was cut off in the prime of his life when he was gaining prominence in business and public life. Tracing his descent from the distinguished family of the Rajah Saheb of Chettinad, he followed the traditions built up by his grand father and father. I offer my sincere sympathy to the bereaved family and share the grief of his loss with friends and admirers.

UJJAL SINGH
Governor of Tamil Nadu

One of the saddest news to the business and industrial communities of this part of India was the untimely demise of Kumara Raja M. A. M. Muthiah Chettiar. I have known him personally, in fact, I have seen him grow up from a young to a mature adult with a fine heart and head. At no stage of his life was he removed from the great traditions of his illustrious family, his father the Raja Saheb and his grand father the late Raja Sir Annamalai Chettiar. This ancient family is great in many ways, in banking and finance, industry and trade and above all its benevolent and charitable disposition. Kumara Raja embodied all these qualities. And it is so sad that he should have been claimed by cruel fate at the prime of his career. To the bereaved family all of us extend our deep felt sympathies.

D. C. KOTHARI
Kothari Buildings, Madras-34

MYSORE PRADESH CONGRESS COMMITTEE
Race Course Road, Bangalore-9

K. Nagappa Alva M.P.
President

8th Sep. 1970

Dear Shri Nagashanmugam,

I have your letter and I am glad to know that you are bringing out a supplement of your magazine in memory of the late Shri Kumara Raja M. A. M. Muthiah Chettiar. The Kumara Raja's philanthrophy in several causes is very well known. He rendered invaluable service in the fields of industry and business. It is a great loss the to country and a personal loss to me who had the privilege of his esteemed friendship.

I am sorry I could not write to you earlier as I was constantly on tour. With regards.

Yours Sincerely,
K. N. ALVA

# இளமையிற் புகழ் சான்றவர்

தமிழ்கூறு நல்லுலகின்கண் செட்டிநாட்டுப் பகுதியில் நிலை கொண்டு வாழ்பவரும், ''மன்னர் பின்னோர்'' என்று இளங்கோ அடிகளால் புகழ்ந்து பாராட்டப் பெற்றவரும் நாட்டுக் கோட்டை மரபினர் ஆவர். இப்பெரு மரபின் ஒளிவிளக்குகளான இராசா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் பேரராகவும், இராசா. சர். முத்தையாச் செட்டியார் அவர்களின் மைந்தராகவும் கருவிலே திருவுடையவராய் தோன்றிய குமாரராசா. முத்தையாச் செட்டியார் தமது இளமையிலேயே மறைவுற்றமை ஈடு செய்ய இயலாப் பேரிழப்பாகும். இந்நன்மகனின் நினைவாக நகரத்தார் திங்கள் இதழ் சிறப்பு மலர் வெளியிடுதல் சாலவும் பொருத்தமுடையது.

குமாரராசா முத்தையாச் செட்டியார் தில்லையம்பலத்திற்கு பொன்வேய்ந்தும், ஒல்காப்புகழ் பல்கலைக்கழகம் கண்டும், தமிழிசைக் கல்லூரி நிறுவியும் போற்றும் பண்பு நிறைந்த தொல்குடியில் தோன்றியதற்கேற்ப எல்லா நல் இயல்புகளும் இனிது சான்றவராய்த் திகழ்ந்தார். அவர் அன்பும், அருளும் நிறைந்து, காட்சிக்கு எளியவராய், கடுஞ்சொல் அற்றவராய், இன்னுசெய்தார்க்கும் இனியவே செய்பவராய் விளங்கினர். மேலும்; தொழில், வாணிபம், வங்கி முதலிய துறைகளில் வல்லுநராய் இலங்கினர்.

இனி, மன்பதைத் தொண்டிலும், நாட்டின் முன்னேற்றப் பணி களிலும் குமாரராசா முத்தையாச் செட்டியார் பேரார்வம் காட்டினர். தமது மரபினர்க்கும், தக்கார்க்கும், ஏழை எளியவர்க்கும் மாருது உதவுவதில் அவர் பேரின்பம் கண்டார். இருவேறுதிருவும், இனிது பெற்றிருந்தும் 'பணியுமாம் என்றும் பெருமை' என்னும் பொன் மொழிக்கு எடுத்துக்காட்டாய் அவர் வாழ்ந்தார். இத்தகு சிறப் பியல்புகள் முற்றிலும் அமைந்து

> ''தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லாம் இனிது.''
> ''மகன் தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
> என்னோற்ருன் கொல்லெனும் சொல்''

என்னும் வள்ளுவர் பெருமான் வாய்மொழிக்கு இலக்கியமாய் விளங்கிய குமாரராசா முத்தையாச் செட்டியார் நம்மைவிட்டு அகன்றபோதிலும், அவருடைய புகழுடல் இவ்வுலகில் என்றும் நிலைத்து வாழும் என்பது திண்ணமாகும். அவர்தம் ஆன்மா இறைவன் இணையடி நிழலில் என்றும் இருந்து நிறையின்பம் எய்தத் திருவருள் புரிவதாக.

கருமுத்து தியாகராசன்

## மிகச்சிறந்தவர்

குமாரராஜா எம். ஏ. எம். முத்தையாச் செட்டியார் அவர்கள் தாராள மனம் உடையவர்கள். அவர்களுடைய ஜீவதசையில் யாருக்குமே கெடுதல் செய்யாதவர்கள். அவர்களால் பயனடைந்த வர்கள் ஆயிரக்கணக்கான பேர்கள். அவர்கள் பூதஉடல் மறைந்த தினத்தன்று ஆயிரக்கணக்கான பேர் வாய்விட்டுக் கதறினுர்கள். பரம்பரையாகத் தருமம் செய்த குடும்பம். சோதனையாக, புத்திரப் பேறு இல்லாது இருப்பது ரொம்ப வருந்தத்தக்கது. வயதான தந்தை இந்தத் துக்கத்தைச் சகித்துக்கொள்ள எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிய வேண்டும். அவர்கள் உயிருடன் இருந்தால் அவர்கள் பாட்டனுர் போலப் பெரும் பேர் எடுத்திருப்பார்கள். அவர்கள் இறந்தது முக்கியமாக நம் சமூகத்திற்குப் பெரும் நஷ்டம். என்னிடம் சிறுபிள்ளைமுதல் ரொம்பவும் அன்பு கொண்டவர்கள். பெரியோர்களுக்கு மதிப்புக் கொடுப்பதில் மிகச் சிறந்தவர்கள். ஏதாவது ஒரு காரியத்தைச் சொன்னுல் அதைச் செய்துவிட்டு எத்தனை நாட்களானுலும் தவருமல் பதில் சொல் வார்கள். அவர்கள் இறந்தது எனக்குப் பெரும் நஷ்டம்.

சி. வி. சிடி. வி. வெங்கடாசலம் செட்டியார்
சென்னை-20.

## எளிமையின் உருவம்

குமார ராஜா மு. அ. மு. முத்தையாச் செட்டியார் அவர்கள் இளம் வயதிலேயே இறைவனடி எய்தியது மிகவும் வேதனைப்பட வேண்டிய விஷயமாகும். எப்பொழுதும் சிரித்த முகத்துடன், எல்லாரிடமும் இனிமையான முறையில் கூச்சத்துடன் பழகும் சுபாவம் படைத்தவர்கள். பெரிய குடும்பத்தில் பிறந்திருந்தாலும் அவர்களது நடையுடை பாவனைகள் மிகவும் எளிமையான முறையில் இருக்கும். எந்தக் காரியத்திலும் அவசரமோ, படாடோபமோ இல்லாமல் ஆழ்ந்து தீர யோசித்து முடிவெடுக்கும் திறமை படைத்த வர்கள். பலதொழில்களில் பொறுப்பான பதவிகள் வகித்துத் திறம்பட நிர்வகித்து வந்தவர்கள். செட்டியார் சமூகத்தில் பலர் பர்மா, மலேயா, சிலோன் முதலிய அயல்நாடுகளில் தங்களின் தொழில்களை இழந்து, உதவி தேடி வந்தவர்களுக்கெல்லாம் இயன்ற அளவு உதவி செய்தவர்கள். கல்வித் துறையிலும், வேலைவாய்ப்புச் செய்துகொடுப்பதிலும் பெரும் பங்கெடுத்துக் கொண்டவர்கள். விளையாட்டுத் துறையிலும் ஈடுபாடுகொண்டு சிறந்துவிளங்கியதோ டல்லாமல், அந்தத்துறை முன்னேறவும் பாடுபட்டவர்கள்.

இவ்வளவு சிறப்புகளுக்கெல்லாம் உரித்தான அவர்கள் சிறிய வயதிலேயே காலமானது எல்லோருக்கும், குறிப்பாகச் செட்டியார் சமூகத்திற்கு, ஒரு பெரும் இழப்பாகும்.

அ. மு. மு. அருணுசலம் செட்டியார்

# எல்லார்க்கும் இனியவர்

குமார ராஜா முத்தையாச் செட்டியார் அவர்கள் தமது இளமை மாருமுன்னர் நம்மைவிட்டு மறைந்தது ஈடுசெய்ய முடியாத ஒரு பேரிழப்பாகும். அவர் நினைவாக நகரத்தார் திங்கள் இதழ் சிறப்பு மலர் வெளியிட்டுப் பாராட்ட முற்பட்டுள்ளமை பாராட்டிற்குரியது.

காலினும் கலத்தினும் வாணிபஞ்செய்து, திரைகடல் ஓடியும் திரவியந்தேடி, ஆலயத்திருப்பணியும், அறத்தொண்டும் மிகப் புரிந்து புகழ்கொண்டது நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபாகும். இம்மரபிலே கானாடுகாத்தான் என்னும் பதியில் புகழ் பெருகத் தோன்றியவர் இராசா சர் முத்தையாச் செட்டியார் அவர்களாவர். இவருக்கும் இராணி மெய்யம்மை ஆச்சிக்கும் தவப்புதல்வனாய்த் தோன்றியவர் குமாரராசா முத்தையாச் செட்டியார் அவர்கள். இவர் கருவிலேயே திருவுடையவராய்ப் பிறந்தவர்.

குமாரராசா அவர்கள் நகரத்தார் மரபினர்க்கு இந்தியன் வங்கி மூலம் செய்த உதவிகள் பலவாகும். இவர் பழகுவதற்கு இனியவர். அரிய பண்புகள் அமைந்தவர். பெருமை அறியாதவர். இன்முகங் காட்டி இனியவை கூறி, நட்புப் பாராட்டும் பெற்றி வாய்ந்தவர். செல்வத்தில் பிறந்து துன்பம் அறியாதவராய் இருந்தும், மற்றவர் துன்பத்தையறிந்து அவற்றை அகற்றுவதில் இவர் காட்டிய ஆர்வத்திற்கு அளவில்லை. எனவே, இவர் மறைவால் மற்றவர் துன்புறுவதில் வியப்பேதும் இல்லையன்றே?

"தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை, தந்தைசொல் மிக்க மந்திரமில்லை" என்னும் மூதுரையைக் கடைப்பிடித்தொழுகி, எல்லார்க்கும் இனியராய் வாழ்ந்த குமாரராசா முத்தையாச் செட்டியார் இன்று நம்மிடையே இல்லையெனினும், அவர் ஆற்றிய நற்பணிகள் இவ்வுலகில் பொன்றுப் புகழுடன் விளங்கும் என்பது உறுதி. அவருடைய ஆன்மா ஆலவாயன் திருவடியின்கீழ் நிலையான அமைதிபெறவும், அவர் பிரிவால் வருந்தும் அவருடைய தந்தையார் இராசாசர் முத்தையாச் செட்டியார் அவர்கள் துயர் நீங்கி மனத்திண்மையுறவும் அங்கயற்கண்ணியின் திருவருளைப் போற்றிப் பரவுகின்றேன்.

தி. சுந்தரம் செட்டியார்
மதுரை.

# ஆறுதல் பெறுக

குமாரராஜா ஆப் செட்டிநாடு அவர்கள் சிறந்த அறிவாளி. எவருக்கும் நன்மை செய்யும் சிறந்த குணம் படைத்தவர்கள். நகரத்தார் சமூகத்திற் சிறந்த அபிமானமும் அன்பும் உள்ளவர்கள். அவர்கள் மறைவு எல்லோருக்கும் தாங்கமுடியாத நஷ்டம்.

செட்டிநாட்டு அரசர் டாக்டர் ராஜாசர். முத்தையா செட்டியார் அவர்களும், M. A. M. ராமசாமி செட்டியார் அவர்களும், குமார ராணி அவர்களும் மற்றும் குடும்பத்தார் எல்லாரும் ஆறுதல் அடையக் கேட்டுக்கொள்கிறேன்.

ருமு. ஆறு. சுப்பிரமணியச் செட்டியார்
SP. M. மெடிக்கல் மார்ட், மதுரை.

# நீங்காத நினைவு

சுமார் 20 ஆண்டுகளுக்கு மேலாக குமார ராஜா மு. அ. மு. முத்தையாச் செட்டியார் அவர்களிடம் நெருங்கிய முறையில் தொடர்பு கொண்டு வந்திருக்கிறேன். தொழில் முறையில் அல்லாது ஆழ்ந்த அன்பும், சிறந்த நட்பும் கொண்டு என்றும் இனியராய், மலர்ந்த முகத்தோடு உரையாடிப் பழகும் அவர்கள் பண்பினை இன்று எண்ணும் போதும் என் கண்கள் பனிக்கின்றன. வழிவழியாக வந்த பெரும் பாரம்பரியத்தின் அலாதியான பெருமையோடும், கம்பீரத்தோடும் காணப்படும் அவர்கள் முகப் பொலிவில் என் போன்ற நண்பர்கள் பலரும் ஈர்க்கப்பெற்று வந்திருக்கிறோம் என்றால் மிகையல்ல. அதே நேரத்தில் சர்வ சாதாரணமாக எளிமையோடும், இனிமையோடும் எல்லோருடனும் பழகும் தன்மையை பாராட்டாமலிருக்க முடியாது. அவர்களின் மறைவன்று பலதரப்பட்ட மக்களும் கூடி கண்ணீர் உகுத்ததே அதற்குச் சான்று.

நமது நாட்டின் தொழில் வளர்ச்சியில் அவர்கள் மிகுந்த ஈடுபாடும், அக்கறையும் காட்டி வந்திருக்கிறார்கள். பல பெரிய தொழிற்சாலைகளின் வளர்ச்சிக்கு குமார ராஜா அவர்களின் பணி பயன்பட்டது. சென்னையில் அவர்கள் தொடர்பினைப் பெறாத பொது நிறுவனங்களே இருந்ததில்லையெனச் சொல்லலாம். எதிர் காலத்தில் அவர்களின் பணி பரவலாக மக்களுக்குக் கிடைக்குமென்ற நம்பிக்கை எல்லோருக்கும் இருந்தது. விதி சதி செய்து மிக மிக இளம் வயதிலேயே அன்னாரைக் கவர்ந்துவிட்டது.

தென் இந்திய வர்த்தக சங்கத்தின் தலைவராகப் பொறுப்பேற்று பணியாற்றிய காலத்தில் சங்கத்தின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டு, தொழில் நிறுவனங்களுக்குப் பயனுள்ள பல பணிகளைச் செய்து வந்திருக்கிறார்கள். அந்த முறையில் தென் இந்திய வர்த்தக சங்கம் அதன் முன்னாள் தலைவர்களில் ஓர் உயர்ந்த தலைவரை இழந்து, ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கி இருக்கிறதென்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அத்தகைய பெரியாரின் நினைவு அஞ்சலியில் கலந்து கொள்ளுவதில்-தென் இந்திய வர்த்தக சங்கம், அதன் உறுப்பினர்கள் சார்பில்-என் கடமையாகக் கருதுகிறேன்.

என் சொந்த முறையில் குமார ராஜா அவர்களை எண்ணுந் தோறும் நான் மிகப் பெருமிதம் அடைகின்றேன். அவர்களுடன் கலந்து, பழகி, பணியாற்றி, தோழமை பூண்டிருந்த கடந்த காலத்தினை ஒரு பொற்காலம் என்றே கூறுவேன்.

இவ்வாண்டின் துவக்கத்தில் என் தந்தையாரும், தாயாரும் அடுத்தடுத்து பத்தே நாட்கள் இடைவெளியில் அமரர்களாகி எங்களைத் துயரத்தில் ஆழ்த்திவிட்டார்கள். அதுபொழுது குமார ராஜா அவர்கள் என் இல்லத்திற்கு வந்து மன நெகிழ்வோடு என்னிடம் துக்கம் விசாரித்து, ஆறுதல் மொழிகள் பலவும் புகன்றார்கள். அதற்கடுத்த பதினைந்தாம் நாளில் அருமைக் குமார ராஜா அவர்கள் அமரராகிவிட்டார்கள் எனும் துயரச் செய்தி எனக்குக் கிடைத்ததும், நிலைகுலைந்து, பெரிதும் அதிர்ச்சி அடைந்துவிட்டேன்.

காலம் காலத்திற்கு அவர்களின் நினைவை நம் உள்ளத்தில் பதிய வைத்துவிட்டு இளமை குன்றாமல் மறைந்துவிட்டார்கள். இத்தகைய ஒரு பெரியாரின் நினைவு அஞ்சலியில் கலந்து கொள்ளுவதை நான் பெரும் பாக்கியமாகக் கருதுகின்றேன். அந்த உயர்ந்த ஆத்மா சாந்தி அடைய இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். குமார ராஜா அவர்களின் நினைவு அனைவரது நெஞ்சங்களிலும் என்றும் நீங்காத நினைவாய் மலரும்; வளரும்.

**P. மருதைப் பிள்ளை**

# உள்ளூர்ப் பழுத்த பயன் மரம்

இளமை மாறுமுன் இறையடி சேர்ந்த குமார ராசா முத்தையாச் செட்டியார் அவர்கள் சிறிது காலமே வாழினும் தனது நறுமணத்தால் மற்றவரை மகிழ்விக்கும் மல்லிகை மலரைப் போன்றவர். தமிழின் காவலராய், சிவநெறிச் சீலராய், பல்கலைக் கழகங் கண்ட பாங்கின ராய்த் திகழ்ந்த இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் மரபில், நாடும் நகரத்தாரும் பாராட்டிப் புகழும் இராசா சர் முத்தையாச் செட்டியார் அவர்கட்கும், இராணி மெய்யம்மை ஆச்சிக்கும் தவப்புதல்வராகத் தோன்றிய குமார ராசா அவர்கள் பண்பின் உருவாய், பணிவின் சின்னமாய் விளங்கினார்.

எல்லோர்க்கும் நண்பராய், எளியோரின் புரவலராய்த் திகழ்ந்த குமார ராசா முத்தய்யாச் செட்டியார் அவர்கள்,

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்னும் பொதுமறைக்கு இலக்கியமாய், தம்மை நாடியும் தேடியும் வருபவர் யாராயினும், அவர்களை இனிய முகத்துடன் கனிவோடு வரவேற்று அளவளாவும் பண்புடையவராய்த் திகழ்ந்தார். "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் குறிக்கோளுடன் தக்கார்க்கு வழங்கியும், மற்றோர்க்கு உதவியும் பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தாற்போலும், ஊருணி நீர் நிறைந்தாற் போன்றும் அவர் வாழ்ந்தார்.

சமூகப் பணியில் சிறந்த குமார ராசா அவர்கள் தொழில் துறையிலும், வாணிபத்திலும் திறஞ் சான்றவராய் விளங்கினார். தொழில், வாணிகம், வங்கி, முதலிய துறைகளிலும், வாணிகச் சங்கங்களிலும் அவரை அறியாதார் தமிழகத்தில் யாருமில்லையென்று கூறலாம். மேலும், தேசிய விளையாட்டுத் துறையிலும் பேரார்வங் காட்டி, இளைஞர்களை அவர் இடையறாது ஊக்குவித்து வந்தார். இவருடைய மறைவு எளிதின் ஈடுசெய்யத் தக்கதன்று. எனினும் இறைவன் திருவுளக் குறிப்பின் பெற்றியை அறிவார் யார்? எல்லோரும் நலம் பெற்று வாழ வேண்டும் என்று விழைந்த குமார ராசா முத்தையாச் செட்டியார் அவர்கள் இளமையிலேயே உலக வாழ்வை நீத்தமை விதியின் செயலேயாகும்.

இப்பெரு மகனின் நினைவாகச் சிறப்பு மலர் வெளியிடும் திரு. நாக.சண்முகத்தின் அன்பையும் தொண்டையும் பாராட்டி, குமார ராசா முத்தையாச் செட்டியார் அவர்களின் ஆன்மா நிலையான அமைதியும் குறையாத இன்பமும் பெற்றுப் பொன்னுலகில் பொன்றாப் புகழுடன் வாழ்கவென அங்கயற்கண்ணி அம்மையின் திருவருளை வாழ்த்துகின்றேன்.

தி. மாணிக்கவாசகம் செட்டியார்

# எளிமையின் உருவம்

குமார ராஜா அவர்கள், எதிர்பாராத வகையில் இளமைக் காலத்திலேயே இறையடி எய்தியது நாட்டுக்கும், குறிப்பாக, நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சமூகத்தினருக்கும் மாபெரும் இழப்பாகும். அரச குடும்பத்தில் பிறந்த அவர்கள், மிக எளிமையான முறையிலேயே தமது வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருந்தார்கள் எப்பொழுதும் சிரித்த முகத்துடன் தோற்றமளிப்பதுடன், எல்லோருடனும், இனிமையாக, அன்புடன் பழகும் சுபாவம் படைத்தவர்கள். நற்குணமும், நல்ல திறமையும் பெற்றவர்கள். உதவி கோரித் தம்மை நாடி வந்தவர்களுக்கெல்லாம், தன்னால் இயன்ற அளவு உதவி செய்தவர்கள்.

அவர்களின் அகால மறைவு தொழிலுலகுக்கு ஈடுசெய்ய முடியாத ஒரு பெரும் இழப்பாகும்.

அவர்களின் மறைவால் துயருற்று இருக்கும் அனைவருக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.

அன்புள்ள

**அ. மு. மு. முத்தையா**

# என்றும் நிலவும்

குமார ராஜா முத்தையாச் செட்டியார் அவர்கள் இளம் வயதிலேயே இறைவனடி எய்தியமை அறிந்து பொதுவாகத் தமிழ் மக்கள் அனைவரும், குறிப்பாக நகரத்தார் சமூகத்தவரும் மனங் கலங்கி நிற்கின்றோம். அவர்களது ஈடுசெய்ய முடியாத இழப்பைத் தாங்கொணாது வருந்தும் அவர்களது அருமைத் தந்தையாருக்கும் அன்பு மனைவியாருக்கும் உறுதுணைத் தம்பிக்கும் ஆறுதல் சொல்வது எப்படி என்று திகைத்து நிற்கின்றோம்.

குமாரராஜா அவர்கள், என்றும் நல்லவையே நாடி, இனியவையே கூறி, ஈந்து இசைபட வாழ்ந்தார்கள். சுற்றத்தார் சுற்றப்பட ஒழுகல்தான் தம் பெருஞ் செல்வத்தாற் பெற்ற பயன் என்றெண்ணி நகரத்தார் சமூகத்தவர்க்கும் மற்றவர்களுக்கும் உதவிகள் பல செய்தார்கள். புகழுடன் தோன்றி, புகழுடன் வாழ்ந்த இந்த அருந்தவப் புதல்வர் இன்று நம்மிடையே இருந்து மறைந்துவிட்டாலும் அவர்தம் நினைவும் புகழும் என்றும் நம்மிடையே நிலவும்.

**சு. ராம. பழ. சுப்பிரமணியன் செட்டியார்**
தலைவர், சென்னை நகரத்தார் சங்கம்.

## புண்ணியத்தின் மகனே வாழி

அன்புபொதி மொழியாளன் அருட்கொடையின் வழியாளன்
இன்பமிகு அறவாளன் எழிற்சென்னை முதலாளன்
நன்மைமிகு அமைச்சானேன் நகரத்தார் மனத்தானேன்
புன்மைதவிர் முத்தையவேள் புண்ணியத்தின் மகனானேன்

எண்ணில்லா அறமெல்லாம் இருந்துமிகக் காக்கவந்தோன்
நண்ணாத நடுவயதில் நமைவிட்டுப் பிரிந்தானந்தோ!
புண்ணில்வேல் புகுந்தாற்போல் புலவோரும் மற்றோரும்
எண்ணிமிகப் புலம்பலுற்றார்; இனியவன்பேர் நின்றுவாழி!

புலவர் வெ. சு. அழகப்பன், எம்.ஓ.எல்
முதல்வர் — மேலைச்சிவபுரி, கணேசர் செந்தமிழ்க் கல்லூரி

## அமரர் குமார அரசர்

அன்பும் அருளும் அடக்கமும் பண்பும்
இன்பமும் ஈகையும் இன்சொலும் முதலா
அருமைக் குணங்கள் அளப்பில பெற்ற
அன்பராம் குமார அரசராம் நீவிர்
விண்ணகம் புகுந்தது வண்டமிழ் பரப்பவோ!
வளமுயர் வணிகத் துறைதனை பெருக்கவோ!
நற்றமிழ் இசைதனை, நலமுயர் தொழில்தனை
இத்தரை அறிந்தது போதா தென்றியோ
நீதியும் அறமும் நிலைபிறழ் வனவாய்
மண்ணும் மலையும் மருண்டு மோதிட
அலையும் இடியும் அணைக்கும் வகைபோல்
அனைவரும் வருந்த அந்தோ இறைவா!
கொடுமை நிறைந்த கொடியவிச் செயல்தனை
செய்திட்ட நீதான் வெறும்கற் சிலையோ?
கனியும் நெஞ்சில் கருணையும் இலையோ?
தமிழகம் பெரும்பலத் தண்கொடை கண்டுநீ
கொண்டவெஞ் சினமோ கொடிய வஞ்சமோ?
யாரே அறிவார் இறைவா! நின்னருட்
திருவடி நிழலில் திளைக்கும்
பேறருள் வாயெனப் பெரிதும் வேண்டுவமே!

புலவர் கி. சட்டநாதன்
தமிழாசிரியர்
இராசா முத்தையா உயர்நிலைப்பள்ளி, சென்னை-20.

# ஞானத் திருவுரு

குமாரராஜா அவர்கள் பால்யம் முதல் வாணிபத்திலும், சிறப்பாக ஆலைத் தொழில்களிலும் சிறந்த இடம் பெற்றவர்கள். ஆலை உற்பத்தி வினியோகத்தில் சிறந்த ஞானம் பெற்றவர்கள். சிறந்த வாணிப அறிவாளி. சிறந்த தர்ம சிந்தனை படைத்தவர்கள். அவர்கள் இறப்பு ஈடுசெய்ய முடியாத நஷ்டம்.

அவர்கள் மறைவை ஒட்டி ராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் மறைந்தது பெரும் வேதனையையும் கலக்கத்தையும் தருகிறது.

ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களுக்கும். M. A. M. ராமசாமிச் செட்டியார் அவர்களுக்கும் குமார ராணி அவர்களுக்கும் மிகுந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**Rm. R. ரெங்கநாதன் செட்டியார்**
கோயமுத்தூர்.

# வழிகாட்டி

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றுமை நன்று.

என்பது திருவள்ளுவப் பெருமானின் திருவாக்கு.

பொருளையும் புகழையும் ஒருசேரத் தேடிய இனம் நம் இனம். அதற்கு ஒரு பெரிய எடுத்துக்காட்டாக விளங்குவது செட்டிநாட்டரசர் அவர்களுடைய குடும்பம்.

அண்ணாமலை அரசர் அவர்கள் செய்த அறங்கள் எண்ணற்றவை. அவர்களைத் தொடர்ந்து முத்தையா அரசர் அவர்கள் செய்த, செய்து வருகின்ற அறங்கள் பலவாகும்.

பாட்டனார் போலவும், தந்தையார் போலவும் கருவிலே திருவுடையவர்களாகவும் அறவுணர்வு மிக்கவர்களாகவும் விளங்கிய குமார ராஜா முத்தையாச் செட்டியார் அவர்கள் தம் இளமைக் காலத்திலேயே இறைவனடி சேர்ந்தது எல்லையில்லாத வேதனைக்கு உரியது.

அவர்களுடைய எளிய தோற்றம், இனிய பேச்சு, தம்மால் இயன்றதைத் தட்டாமல் எவருக்கும் செய்ய வேண்டும் என்ற எண்ணம், அதனைச் செயலாக்கும் திறன், செய்தவற்றை மிகைப் படுத்திக் கொள்ளாத உயர்ந்த பண்பு இவையெல்லாம் என்றென்றும் மறக்க முடியாதவை.

குமார ராஜா அவர்கள் மிக்க இளமைக் காலத்திலேயே தென்னிந்திய வர்த்தக சபைத் தலைவராகவும், சென்னை மாநகர ஷெரீப்பாகவும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துச் செனட் உறுப்பினராகவும் மற்றும் பல்வேறு தொழில் நிறுவனங்களில் நெருங்கிய தொடர்புடையவர்களாகவும் டைரக்டராகவும் விளங்கினார்கள்.

அத்தகைய பெருமகனாரின் மறைவு தொழில் உலகிற்கும் குறிப்பாக நம் இனத்தவருக்கும் ஈடுசெய்ய முடியாத இழப்பாகும்.

அவர்களுடைய குணநலன்களும் நிர்வாகத் திறமையும் நம் இளைஞர்களுக்கு நல்ல வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

அவர்கள் ஆன்மா சாந்திபெற இறைவன் மலர்ப் பாதங்களை வணங்குவோமாக.

**வ. செ. சிவலிங்கம் செட்டியார்**
மைலாப்பூர், சென்னை-4.

# கலன்கரை விளக்கம்

செந்தமிழ்க் கழகத்தில் தந்தையோடு இனிதமர்ந்து, தமிழ் வளர்த்த தலைமகன். இசைவளர்த்த வித்துவன். தொழில் வளர்த்த தலைவன்.

இசையில் இனிமையாய், தமிழில் இளமையாய், செயலில் துணிவாய், பதவியில் பணிவாய், சொல்லில் சுவையாய், மண்ணில் காணும் பொருள்கள் அனைத்திலும் பாலில் நெய்யாய் பரந்து, நிறைந்திருக்கிறீர்கள்.

தலைவன், தொண்டன், மன்னன், அறிவுடை அமைச்சன், நல் ஆசிரியன், மாணவன், மதிவாணன், நண்பன் செம்மல், சிந்தனையாளன், புத்துலகச் சிற்பியன், வழிகாட்டி, மேலாக, மனிதனாய், எல்லாவற்றிற்கும் மேலாக எங்களில் ஒருவனாய், உடன் வாழ்ந்த நாட்களின் நினைவுகள் நிரம்பவும் பசுமையானவை.

கற்றார்க்கும், கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாய் இத்தமிழ் மண்ணில் பவனிவந்த நாளில் உங்கள் தேனூறும் சொல்லுக்கு வாயூறி நின்றவர்களில் நானும் ஒருவன்.

எண்ணற்ற மாலுமிகளுக்குத் திசைகாட்டி ஓயாத கலன்கரை விளக்கம்; இனத்தவர் பலருக்கு உதவிசெய்து களைக்காத இளைய ராஜா. நீங்கள் பெரும் பொருள், பரம் பொருளில் கலந்துவிட்டீர்கள். நாடும் அழுகின்றது. நல்லவரும் அழுகின்றனர். கொடியவன் கூற்றுவன் ஒருவன் அன்றி இக்குவலயம் கசிந்துருகி, கண்ணீர் மல்கி நிற்கிறது.

கே. என். சுப்பையா
தொழில் விரிவாக்க அதிகாரி
சௌத் இந்தியா கார்பொரேஷன் ஏஜன்ஸீஸ் லிட்., சென்னை.

# இறை அருள்பாலிக்கவில்லை

குமாரராஜா மு. அ. மு. முத்தய்யா செட்டியாரவர்கள் இளமைப் பருவத்திலேயே சிவபதம் எய்தியது அவர்கள் குடும்பத்தார்க்கும் சமூகத்திற்கும் ஈடுசெய்ய இயலாத நஷ்டமாகும்.

அவர்களிடம் எனக்கு அதிகத் தொடர்பில்லையாயினும் அவர்களுடைய பரந்த மனம், உபகாரச் சிந்தை முதலியன பற்றிக் கேள்வியுற்றிருந்தேன். அவர்கள் ஐக்கிய சங்கத்தின் இரண்டு கல்விக் குழுக் கூட்டங்கட்கு நகர விடுதிக்கு வந்திருந்தபொழுது அவர்கள் புன்முறுவல் பூத்த முகத்தைக் கண்டு, அகத்தினழகு முகத்தில் தெரியுமென்பதை உணர்ந்தேன். அக்கூட்டங்களில் தலைமை தாங்கி நுணுக்கமாக ஆராய்ந்து செய்த முடிவுகள் பெரிதும் போற்றத் தக்கவை. அவர்கள் சமூகத்திற்குச் செய்ய விருந்த பல உபகாரச் செயல்களை சமூகம் பெற்று மகிழ இறையருள் பாலிக்கவில்லை.

மாநகரி அ. முருகப்ப செட்டியார்
மேலாளர் ரங்கூன் நகரவிடுதி, சென்னை.

# அன்பு மறைந்தது

மதிப்பிற்குரிய குமாரராஜா அவர்கள் மறைந்த செய்தி நம் சமூகத்திற்கு, குறிப்பாக இளைஞர்களுக்கு ஓர் அவச்செய்தியாகும்.

மறைந்த இளவல் அவர்கள் அடக்கமும், அன்பும், இன்சொலும் மிகுந்தவர்.

கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக நகரத்தார் ஐக்கிய சங்கத்தோடு அதிகத் தொடர்புகொண்டு சமூக இளைஞர்களின் முன்னேற்றத்திலும், பொருளாதார மேம்பாட்டிலும் மிக ஈடுபாடு கொண்டிருந்தார்கள். கல்லூரி அட்மிஷன், வேலைவாய்ப்பு அளித்தல், தொழில் துறையில் உள்ளோர்க்கு உதவுதல் இதுபோன்ற பல நற்பணிகளில் ஆர்வமிகக் கொண்டிருந்தார்கள்.

நகரத்தார் ஐக்கிய சங்கத்தில் நடைபெறும் கல்விக்குழுக் கூட்டங்களுக்குத் தவறாது வந்திருந்து தன்னாலான உதவி யனைத்தையும் செய்தார்கள். நம் சமூகத்துப் பெண்கள் பட்டப்படிப்பில் முன்னேறி வருவதைக் கண்டு மகிழ்ந்தார்ள். மேலும் படிக்க வூக்கமளிக்க வேண்டுமென விரும்பினார்கள்.

திண்ணைப் பள்ளிக்கூடத்திலே ஏட்டுப் படிப்பு முடித்துவிட்டு, உலக அனுபவம் ஒன்றையே பெரும் படிப்பாய்க் கொண்டு திரைகடலோடித் திரவியம் தேடி, தான தருமங்களுக்கு வாரி வழங்கி, சோழ மன்னர்களைப்போல் சென்றவிடமெல்லாம் கோயில் திருப்பணிகள் செய்து வறுமையின்றி வான்புகழ வாழ்ந்த சமூகம், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு நிலைகுலையத் தொடங்கி பெரு வீழ்ச்சியுற்றுத் தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கிறது. பஞ்சமே காணாத குடும்பங்கள் பல பஞ்சையாய் விட்டன.

இந்நிலை கண்டு இறங்கிய இளைய ராஜா அவர்கள் செல்வாக்குள்ள நிதிக்கமிட்டி ஒன்று ஏற்படுத்தி மிகப் பெரிய அளவில் நிதி திரட்டி, சரியானபடி முதலீடு செய்து சமூகத்திற்குப் பெருமளவில் உதவி புரிய வேண்டுமென ஆசை கொண்டிருந்தார்கள். இந்நிலையில் அவர்கள் பிரிவு நம் சமூகத்திற்குப் பேரிழப்பாகும்.

அமைதியோடும், அடக்கத்தோடும் விளம்பர ஆடம்பரமின்றி, தன்னலமில்லாமல் செயலாற்றி வந்த அந்தப் பெருந்தகைக்கு, அவர்களின் சிந்தனைகளைச் செயலாக்கி நகரத்தார் சமூகம் உய்ய வழிவகை செய்வதே நாம் அவர்களுக்கு அளிக்கும் அஞ்சலியாகும்.

**மெ. மெய்யப்பன்**

மேலாளர் - நகரத்தார் ஐக்கிய சங்கம்
சென்னை.

# மறு பிறவி எடுத்துவந்து மகிழ்வுதர வேண்டுகிறேன்

எனது அருமைக் குமாரராஜா அவர்கள் காலமாகிவிட்டார்கள் என்று என்றால் இன்னும் நம்பவே முடியவில்லை. 17-1-70 அன்று மாலை நான் எங்கள் ஊருக்குப் போகுமுன் குமாரராஜா அவர்களிடமும் குமாரராணி அவர்களிடமும் சொல்லிக்கொண்டு போகும் போது திரும்ப நான் குமாரராஜா அவர்களை உயிரோடு பார்க்க மாட்டேன் என்று யார்தான் நினைப்பார்கள்?

24-1-70 அன்று மாலை அவசரமாக என்னை செட்டிநாடு வரும்படி தகவல் வந்து அங்கு சென்றதும் குமாரராஜா அவர்கள் இறந்த செய்திகேட்டு நடைப்பிணமானேன், உள்ளம் குமுறினேன், மதிமயங்கினேன்.

கணவனை இழந்த குமாரராணி அவர்களையும், தலை மகனை இழந்த பெற்றோர்களான உயர்திரு ராஜா அவர்களையும், உயர்திரு ராணி அம்மாள் அவர்களையும், பெறற்கறிய அண்ணனை இழந்த உயர்திரு ராமசாமி அவர்களையும், பெருமைக்குரிய கொழுந்தனை இழந்த சிகப்பி ஆச்சி அவர்களையும் எப்படித்தான் இப்பேரிழப்பைத் தாங்கமுடியும் என நான் எண்ணியபோது பிறர்க்கென்றே வாழும் இக்குடும்பத்துக்கு, எழுத்தில் அடங்காத தருமங்கள் செய்துள்ள இப்பெரிய குடும்பத்துக்கு வேண்டாத இச் சோதனையை ஏன் இறைவன் செய்தான் எனப் புலம்பினேன்.

குமாரராஜா அவர்கள் பெரும் பேரறிவாளர், அடக்கமிக்கவர், சாந்தம், ஈகை, தயாளம் நேர்மை போன்ற எல்லா வகையான பெருங் குணங்களையும் பெற்றவர்கள்.

நான் அவர்கள் குடும்பத்தில் ஒருவனாகவே பழகும் பெரும் பாக்கியம் பெற்றேன். ஒரு கோடீஸ்வரர் இவ்வளவு எளிய சுபாவத்தோடு பழகுவது மிக அரிது. அவர்கள் கூறும் எந்த முடிவும் உறுதியும், நேர்மையும் மிக்கதாகும்.

அவர்களது இறுதி ஊர்வலத்தில் கலந்துகொண்ட பல்லாயிரக் கணக்கான மக்களே அவர்களின் உயர்விற்குத்தக்க சான்றாவர். அவர்கள் இறப்பு குறிப்பாக நகரத்தார் சமூகத்துக்கும் மற்றும் நம் நாட்டிற்கும் ஈடுசெய்ய முடியாத ஒன்றாகும். அவர்கள் மறைவால் வாடும் நம் அரசர் பெருமானின் குடும்பத்தில் அவர்கள் மறு பிறவி எடுத்து இப்பெரிய குடும்பத்தை மீண்டும் மகிழ்வித்து நமக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்க ஆண்டவனை வேண்டுகிறேன்.

ஆறு. ராமசாமி,
செட்டிநாடு இல்லம், சென்னை-28.

# நான் கண்ட குமாரராஜா முத்தையா

'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்பது தமிழ்மறை. வற்றாத வளங்கொழிக்கும் பேராறுகளோ, வானோங்கி நிமிர்ந்து நிற்கும் மாட மாளிகைகளோ, ஒரு நாட்டிற்குப் பெருமை தருவன அல்ல; நலம் பல சான்ற நல்லோர்களே ஒரு நாட்டின் மேன்மைக்கும் நல் வாழ்வுக்கும் காரணம் ஆவர். அத்தகைய நன்மக்கள் வரிசையில் குறிப்பிடத்தக்கவர் காலம் சென்ற செட்டி நாட்டுச் செம்மல் குமாரராஜா மு. அ. மு. முத்தையாச் செட்டியார் பி.ஏ., அவர்கள்!

அல்லாரைக் கோதென ஒதுக்கி, நல்லாரைச் சாறெனை விரும்பிக் கவர்ந்து செல்வது கொடுங்கூற்றுவனது இயல்பு. இவ்விதிக்கு விலக்கில்லாமல் தமது இளமைப் பருவத்திலேயே 41ஆம் வயதில் திரு குமாரராஜா முத்தையாச் செட்டியார் இயற்கை எய்தினர். இச் செய்தி கேட்டதும் தமிழகம் துணுக்குற்றது. தலைவனை இழந்த வணிகர் சங்கம் வருத்தத்தில் ஆழ்ந்து கண்ணீர் வடித்தது. நண்பர்கள் கலங்கினர். அன்பர்கள் ஆறுத் துயர் கொண்டனர்; செட்டி நாட்டரசரின் குடும்பம் பிரிவு என்னும் பெருந்தீயால் பெரிதும் சூழ நின்றது.

கோயில் திருப்பணியும் குறைவற்ற பேரறமும் உயிர் மூச்செனக் கொண்ட நகர வணிகர் சமூகத்தில், பெருஞ் செல்வராகத் திகழ்ந்தவர், திரு குமாரராஜா முத்தையாச் செட்டியார் அவர்கள். முரசுகெழு செல்வமும், அரசு மதிக்கும் செல்வாக்கும் உடையராயினும் இப்பெருமகனார் எம் போன்றவர்களிடத்திலும் நெருங்கிப் பழகும் பண்பைப் பெற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. நான் இவர்களிடமும், இவர்கள் குடும்பத்தாரிடமும் நெருங்கிப் பழகும் பேறு பெற்றதால் அக் காலையான் இவர்களிடம் பல அரிய பண்புகளைக் காணும் வாய்ப்புகளைப் பெற்றேன்.

எத்தகைய இடைவிடாத அலுவல்களில் ஈடுபட்டுள்ள நேரத்திலும் இவர்கள் என்னைக் கண்டால் நன்முகம் காட்டி, இன்மொழி கூறி வரவேற்கத் தயங்கியதில்லை. மற்றவரிடமும் இவர் இனிமையாகவே பழகுவார். இவ்வினிய இயல்பும், எல்லோரையும் வசீகரிக்கும் எழில்மிகு தோற்றமும் இவருக்குப் பல உயர்ந்த பதவிகளைத் தேடித் தந்தன. சென்னை செரீப் ஆகவும், வணிகர் சங்கத் தலைவராகவும் ரேஸ் கிளப் ஸ்டுவர்டாகவும் இந்தியன் வங்கி இயக்குநராகவும் இவர் ஆற்றிய பொதுப் பணிகள் அளவற்றவை. வெளி நாடுகள் சென்று வந்தமையால் இவர் சிறந்த தொழில் அனுபவமும் பெற்று அத்துறையில்மேதையாக விளங்கினர். சுருங்கக் கூறின், பொதுப் பணிகளில் ஈடுபட வேண்டும் என்ற துடிப்பு; பொங்கொளி வீசும் கண்கள்! இனிமை கலந்த மொழிகள்; எவரையும் கவரும் எழில் மிகு தோற்றம்! கட்டான உடல்; கலைகளைப் பாராட்டும் நெஞ்சம்! நிமிர்ந்த மார்பு; அதனுள் நிறைந்து கிடக்கும் பரந்த இதயம்! இடைவிடாத உழைப்பு; ஏழைகளுக்கு உதவும் எண்ணம்! அன்பு கமழும் பேச்சு; அள்ளிக் கொடுக்கும் அகன்ற உள்ளம்!

இத்தகைய நன்மகனை இழந்து பிரிவு என்னும் பெருந்துயர் சுட, வாடி நிற்கும் செட்டி நாட்டரசரும், ஆற்றொணாத் துயரில் ஆழ்ந்து நிற்கும் குமாரராணி மீனாட்சி ஆச்சி அவர்களும் அவர் தம் குடும்பத்தினரும் பிரிவுத் துயரம் நீங்கப் பெற்று ஆறுதல் அடைவர்களாக!

(திருச்சி பொ. மாணிக்கவாசகம்)

# விதியின் வலிமை

குமாரராஜா - பேரன்பு, தன் நம்பிக்கை, பணிவு, விடா முயற்சி, இவற்றின் பிரதிபிம்பம். என் உள்ளமெலாம் நிறைந்த அருமைக் குமாரராஜா முத்தையா செட்டியார் அவர்கள் அன்புக் கோர் எல்லே. நான் தொழில் துறையில் இறங்க வேண்டு மென்று நினைத்தபொழுது எனது நெருங்கிய உறவினரும், என் நல் வாழ்வைப் பெரிதும் விரும்புபவரு மான டாக்டர் ராஜா ஸர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்களை நாடி, எனக்குப் பொருளுதவி செய்யக் கோரினேன். சிறு அவ காசத்திற்குப் பிறகு குமாரராஜா அவர்களையும், அன்னாரின் சென் னைக் கிளை ஜெனரல் மானேஜர் அன்பர் த. அ. கணபதி செட்டி யார் அவர்களையும் கலந்து ஆலோசிக்கச் சொல்லி மேற்படி யார்களிடம் வேண்டிய உதவி தொழில் துறையில் செய்யும்படி சொல்லி, வெளியூர் சென்று விட் டார்கள். இது 1966ஆம் நடந் தது. அன்று முதல் குமாரராஜா அவர்களின் இறுதி நாள்வரை அவர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் நிரம்பப் பெற்றேன். என் தொழில் சம்மந்தமாகவும், மற்ற தொழில்கள் சம்மந்தமாக வும், அவர்களிடம் பேசி, ஆராய்ந்து முடிவுகள் காணும் பேறு எனக்குக் கிடைத்தது. என் தொழில் வளம் பெருக குமார ராஜா அவர்கள் முக்கிய காரண கர்த்தா ஆவார்.

குமாரராஜா - அதிபுத்திமான். தன் வயதைக் காட்டிலும் பன் மடங்கு உலக அறிவு படைத்த வர்கள். குமார ராஜா அவர்கள் எப்படிப்பட்ட சிக்கலான பிரச் னைக்கும் ஒரு நொடிப் பொழுதில் நல்முடிவு கூறக்கூடிய கூர்மை யான புத்திசாலி. காண வரு வோர் எத்தகையவராயினும், இனிய முறையில் வரவேற்று நல் வார்த்தை பேசி வேண்டியதை குறுகிய காலத்தில் செய்து கொடுத்துப் பேரின்பம் காண்பார் கள். அன்னாரின் வலது கை செய்வது இடது கைக்குத் தெரி யாது. அவர்களைக் காணவும், அவர்களது குரலைக் கேட்கவும், என் உள்ளம் விரும்பியும், இயற் கையின் கொடுமையால் நிறைவு பெறவில்லை. இன்றைய சூழ் நிலையில் அவர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்களேயானல், எனக்குப் பல வகைகளில் ஆறு தல் அளித்திருப்பார்கள். விதியை நாம் வெல்ல முடியுமா? விதி நம்மைத்தான் வெல்லும்.

குமாரராஜா அவர்களின் பிரி வால் நம் ராஜா அவர்களும், குமாரராணி அவர்களும், அரு மைத் தம்பி மு. அ. மு. ராமசாமி செட்டியார் அவர்களும், என் தங்கை சிகப்பி அவர்களும், ஆருத்துயரிலிருக்கின்ருர்கள். எல் லாம் வல்ல இறைவன் அவர் களுக்கு நீண்ட ஆயுளையும் சகல சம்பத்தையும், மக்கட் செல்வத் தையும், கொடுத்து நல்வாழ்வு வாழ பிரார்த்தித்துக் கொள் கிறேன்.

நம் குமாரராஜா அவர்களின் ஆன்மா சாந்தி அடைய எல்லாம் வல்ல இறைவன் அருள் புரிய வேண்டிக்கொள்கின்றேன்.

அரு. வள்ளியப்பன்
6-A, ராமன் தெரு, சென்னை-17.

# பண்புடைச் செம்மல்

ஏ. சேதுராமன்
செயலாளர் சௌத் இந்தியா ஸ்டக்சுரல் கார்பொரேஷன் லிட்.,

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்று கூறிய வள்ளுவன் வாய் மொழிக்கு ஏற்பச் சிறப்புடைச்செட்டிநாட்டரசர் பரம்பரையில் தோன்றியவர்கள் நம் குமாரராஜா முத்தையா செட்டியார் அவர்கள்; அன்னூர் சிறந்த தொழிலதிபர், கல்வித்துறை வல்லுநர்; சிறந்த கலை ரசிகர் என்ற முறையிலும் இவர்கள் நாட்டின் பொது வாழ்வில் ஒவ்வொரு நிலையிலும் சிறப்பான தொடர்பு கொண்டு பணியாற்றியுள்ளார்கள். வணிகச் செயல் முறையில் பல துறையில் இவர்கள் குறிப்பிடத்தக்க பங்கு கொண்டுள்ளார்கள். வாணிகம் பற்றிய செய்திகளைப் பற்றித் தெளிந்த கருத்துக்கள் இவர்களுக்கு உண்டு. தென்னிந்திய வணிக சங்கத்தின் தலைவராக, இந்தியன் வங்கியின் இயக்குனராக இருந்து ஒரு வளம்பெற்ற தொழில்முறைக் காலத்தை இவர்கள் வளர்த்துள்ளார்கள். இவ்வாறு அவர்கள் வளர்த்தது பெருஞ் சமூக நலத்தின் உள் உணர்வு தந்த அறிவால் ஆகும். இவர்களுக்கே உரியது என்று எனக்குத் தோன்றிய இவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கைப் பண்புகள் ஒன்றிரண்டை மாத்திரம் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இவர்களுடைய கூர்ந்த ஆர்வமும், என்றும் மாருத அடக்கமான வணக்கப் பண்பும், கவர்ச்சிதரும் சொல் இனிமையும், புன்னகை தவழும் புன் சிரிப்பும் தன்பால் கொண்டவர்கள். எதையும் மேன் மேலும் அறிய வேண்டும் என்னும் அறிவு வேட்கை கொண்டவர்கள்.

சிக்கலான பொருள்களைப்பற்றி தாம் தெளிவு எனக் கருதும் பிறருடைய கருத்துக்களை ஏற்றுக்கொள்வதில் சற்றும் சளைத்தவர் அல்லர். தாம் சிந்தித்துச் செயல் ஆற்றுவதை விட்டு பிறர் சொல்வதையே கேட்டுக் கொண்டிருப்பவரும் அல்லர். விவாதத்திற்குரிய சிக்கலான பொருள்களைப் பற்றி மதி நுட்பத்தால் ஆராய்ந்து விளக்கம் தரும் திறன் படைத்தவர்கள். பல துறைகளைப் பற்றி மிக நுணுக்கமாகத் தெரிந்து கொண்டிருப்பதையும், பிறருடைய கருத்துக்களும், மன நிலையும் என்ன என்பதைப் புரிந்துகொள்வதில் காட்டும் விருப்பத்தையும் கண்டு வியப்பு அடைந்திருக்கிறேன். அன்னூர் தாம் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகளை மிகவும் உண்மையுடனும் கடமை உணர்ச்சியுடனும் செய்திருக்கிருர்கள்.

'காட்சிக்கு எளியன் கடுஞ்
சொல்லன் அல்லனேல்—
மீக் கூறும் மன்னன் நிலம்' என்பதற்கு இலக்கணமாக அமைந்த பெருந்தகையார்; இவர்களிடத்தில் வருகின்ற யாரும் உதவி பெருது வெறுங்கையோடு திரும்புயதில்லை. இவர்களிடம் பொருளுதவி பெற்ற தனி மனிதர்களும் நிறுவனங்களும் எண்ணிறந்தன. எல்லோருக்கும் உதவ வேண்டும் என்ற திடமான எண்ணம் உடையவர்கள். இறைவன் தமக்கு குறைவில்லாது கொடுத்திருக்கின்ற செல்வத்தைப் பிறருடன் தாராளமாகப் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள்.

பிறர் தமக்குச் செய்த சிறு உதவியையும் நினைவில் வைத்துக் கொள்கின்ற பண்புபடைத்த பெருமகனார் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்.

இன்று அவர்கள் நம்மிடையே இல்லை; இயற்கை எய்திவிட்டார்கள். அவர்களின் மறைவு நம் சமூக இளைஞர்களுக்கு ஒரு பேரிழப்பு. செல்வத்துப் பயனே ஈதல் என்ற ஆன்றோர் வாக்கினை நன்கு உளங்கொண்டு தாம் ஈட்டிய பொருளைப் பொதுநலப் பணிகளுக்கு வழங்கினார்கள். எனவே இவர்களின் உடல் மறைந்திருப்பினும் இவர்களின் அறங்களும், பண்புகளும் புகழும் மற்றவர்களுக்கு வழி காட்டுவனவாய், மக்களின் உள்ளங்களில் எப்போதும் நிலைத்திருப்பதில் வியப்பில்லை.

# நினைவுச் சின்னங்கள்

அறம் பேணிப் பொருள் தேடி, புகழ் வளர்த்து நெறிநின்று, ஈசன் அருள் ஈட்டி வாழ்ந்து வரும் வணிகர் குலத்தில் ஒளிச் சுடராய்த் திகழ்ந்த ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் பெருங்குடியில், உதித்த பெருமகன் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களின் மூத்த மகனாய்த் தோன்றி, கல்வி கேள்விகளில் சிறந்து, அன்பு, பண்பு, அடக்கம், அருள், இவை யனைத்துக்கும் உறைவிடம் என்று பலராலும் பாராட்டப் பெற்ற "நம் குமாரராஜா" அவர்கள் இன்று நம்மிடம் இல்லை.

நல்லவர்களை இறைவன் விரைவில் தம்மிடமே அழைத்துக் கொண்டு விடுவான் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். நம் குமாரராஜா அவர்களும் அப்படித்தான் இறைவன் அடியில் கலந்துவிட்டார்கள் போலும்.

புகழுடன் தோன்றித் தந்தை வழி மகன் வழி எனக் கொண்டு பல்வேறு நாடுகளைக் கண்டு தாம் பெற்ற அனுபவங்களைத் தம் நிறுவனங்களில் செயற்படுத்தி, பீடும் புகழும் பெற்று, நாளும் நாளும் ஓங்க வளரும் நிலை கண்டு தாமும் பிறரும் பூரித்திட வேண்டிய நாளில் கூற்றுவன் கொடுஞ்செயல் புரிந்துவிட்டான்.

காலன், கண்ணிலி, எவ்வளவு கொடியவன்! எத்துணை நயவஞ்சகன்? இரக்கமென்பதே அணுவளவுமில்லா அரக்கன் என்று காலனைத் தூற்ற வேண்டிய நிலையை நாம் அடைந்துவிட்டோம்.

குமாரராஜா அவர்களின் வாழ்க்கை மணம் மிகுந்த மலரைத்தான் நமக்கு நினைவு படுத்துகிறது. மலரைப்போலவே தோன்றி அவர்கள் மலரைப் போலவே மறைந்துவிட்டார்கள்.

அவர்கள் மறைந்தாலும் அவர்கள் தொடர்புடைய நிறுவனங்கள் அனைத்தும் அவர்கள் காட்டிய வழியில் செயற்பட்டு, அவர்களின் அன்புமிக்க நினைவுச் சின்னங்களாக என்றென்றும் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

நமது நினைவு அஞ்சலிகளை அந்தப் பொன்மகனாருக்கு உரிமையாக்குவோம்.

M. சிவப்பிரகாசம்
பொறுப்பாளர்
சௌத் இந்தியா கார்பொரேஷன் ஏஜன்ஸீஸ் லிட்.,

# அருட் பெருந்தலைவர்

குமாரராஜா மு. அ. மு. முத்தைய செட்டியார் அவர்களின் இளமைக் காலப் பெரும்பிரிவினால் ஏற்பட்ட அதிர்ச்சிக்கும் ஆறாத் துயரத்திற்கும் மாறுதலும் ஆறுதலும் ஒருநாளும் இல்லை.

பேரறங்களினாலும், அரும்பணிகளினாலும் பெரும்புகழ் பெற்ற இரு பெருந்தலைவர்களாகிய டாக்டர் ராஜா சர் அவர்களின் பெயரராகவும் டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களின் குமாரராகவும் தோன்றி அவர்களின் வழியைப் பின்பற்றி வளர்ந்துவந்த குமாரராஜா அவர்கள் கல்வி, வாணிகம், வங்கி, கலை முதலிய பொதுநலத் துறைகளில் ஆற்றிய பணிகள் பற்பலவாகும். அவர்களின் வண்மையும், இனிமையும், நுண்ணறிவும், ஆட்சித் திறனும், தலைசிறந்த நேர்மைப் பண்பும் அனைவராலும் போற்றப்பெற்றவை. குமாரராஜா அவர்களது பிரிவினால், நம் நாடு ஓர் அருட்பெருந்தலைவரை இழந்துவிட்டது.

**பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்.**

# உள்ளம் சிலிர்க்கிறது

பணிவுடையவர்களாக இருப்பது எல்லார்க்கும் நல்ல அணியைப் போன்றது. ஆயினும் செல்வர்கள் பணிவுடையவர்களாக இருந்தால் அது அவர்களுக்கு மேலும் ஒரு செல்வம் ஆகும் சிறப்பை உடையது என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

செட்டிநாட்டு அரசர் குடும்பத்திலே உள்ள பண்பும், பணிவும், எளிமையும் அவர்களுக்கு ஒரு பங்கு அல்ல நூறு, ஆயிரம் பங்கு செல்வச் சிறப்புடையனவாக விளங்குகின்றன. அந்தக் குடும்பத்தில் உதித்த குமாரராஜா அவர்கள் எளிமைக்கும், இனிமைக்கும், இரக்கத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்கினார்கள். மற்றவர்களிடம் மட்டும் அல்லாமல் தங்களிடம் பணிபுரிபவர்களிடமும் அவர்கள் காட்டிய ஆதரவு என்றென்றும் மறக்க முடியாதது.

பொதுவாக எல்லா நிறுவனங்களிலும் நல்ல முறையில் கற்றுத் தேர்ந்தவர்களுக்கே வேலைவாய்ப்பு அளிக்க முன்வருவார்கள். ஆனால் குமாரராஜா அவர்கள் படிப்பில் மார்க் குறைவாக வாங்கித் தேர்வு பெற்றிருந்தாலும் குடும்பப் பண்பு, பொருளாதார நிலை இவற்றை எல்லாம் பார்த்து வேலை கொடுப்பார்கள்.

அவர்கள் தீர யோசித்தே முடிவுகள் செய்வார்கள். அவற்றைச் சிறிதும் ஆரவாரமற்ற முறையில் செயற்படுத்துவார்கள்.

அவர்கள் ஒருநாள்கூடத் தாயாரைச் சந்திக்காமல் இருக்க மாட்டார்கள். இராணி அவர்கள் சொல்கின்றவற்றை மிகப் பரிவோடும், பாசத்தோடும் உடனுக்குடன் செய்வார்கள்.

ராஜாவிடம் அவர்கள் கொண்டிருந்த அன்பும் மரியாதையும் எல்லையில்லாதவை.

பெற்றோர்களை அவர்கள் கண்கண்ட தெய்வங்களாகவே மதித்து வந்தார்கள்.

‡

அவர்கள் இறைவனடி சேர்வதற்குச் சற்று முன்னர் நான் அவர்களோடு தொலைபேசியில் தொடர்புகொண்டேன். சிறிது நேரத்தில் அவர்கள் தொலை தூரத்திற்கு, திரும்பி வராத இடத்திற்குப் போகப் போகிறார்கள் என்று எவ்வாறு எண்ணமுடியும்?

கடைசியாக அவர்களோடு தொலைபேசியில் தொடர்புகொண்ட நிகழ்ச்சியை நினைக்கின்றபொழுதெல்லாம் என் கண்கள் கலங்குகின்றன. உள்ளம் சிலிர்க்கிறது.

ஏ. கணபதிச் செட்டியார்,

மேலாளர், மதுரை சௌத் இந்தியா கார்பொரேஷன்.

## நான் அறிந்த பெரிய தம்பி

எல்லாரும் குமாரராஜா என்று அழைத்தாலும் ஒரு சிலர் மட்டும் அவரைப் பெரிய தம்பி என்று கூப்பிட்டு வந்தார்கள் என்பது செட்டி நாட்டு மரபினை நன்குணர்ந்த பெருமக்கள் எல்லார்க்கும் நன்கு தெரிந்த ஒன்று.

அறத்திற்கு அன்பு சார்புடையது என்பதனை மிக நன்றாக உணர்ந்திருந்த பெரிய தம்பியவர்கள், அன்புடைய சுற்றத்தாரையும் மற்றையோரையும் தழுவியதனால், உறவினர்கள் அன்புடன் பெரிய தம்பி என்றழைக்கவும், ஏனையோர் குமாரராஜா என்று அழைக்கவும் ''அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறன் அறிந்து தீதின்றி வந்த பொருள்'' என்ற கோட்பாட்டுக்கிணங்க அவர்கள் வாழ்ந்த பெருமையினை யாரும் மறக்க இயலாது.

அவர்களுடைய மதி நுட்பத்தினை நன்குணர்ந்திருந்த நான் அவர்களைப் பொதுக்கூட்டங்களில் வந்து கலந்து கொள்ளுமாறு அழைத்தபொழுதெல்லாம் அவர்களிடமிருந்த இயற்கையான கூச்சத்தாலும் ஏனைய பெரியோர்களிடத்து வைத்திருந்த பெருமதிப்பாலும் தனக்கு வந்த வாய்ப்புக்களையும் பெருமைகளையும் ஏற்க முற்றிலும் தயங்கியவர்களாகவே தன்னுடைய வாழ்க்கையினை முடித்துக் கொண்டு விட்டார்கள்.

பெரிய தம்பியினது இரக்க சிந்தனையால் பயனடைந்த இளைஞர்கள் எண்ணற்றோர். இன்றும் இந்தியன் வங்கியிலும், அவர்களுடைய வர்த்தக நிறுவனங்களிலும் அவர்கள் செயலாற்றி வருகின்றனர்.

இளைய தலைமுறைக்கு வழிகாட்ட வேண்டிய நேரத்தில் பெரிய தம்பி நம்மைவிட்டுப் பிரிந்தது ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும்.

எம். வி. எம். அழகப்பன், எம். ஏ.,

# வீட்டரசு விழுமியதோ?

விட்டுக்குப் பொருள்தேடி விணுளைக்
கழிக்கின்ருர் மிக்க நாட்டில்,
நாட்டுக்குப் பொருள்தேடி நல்கியமுத்
தையமன்ன! நகரத் தாரின்
ஏட்டுக்குப் பொருளாய்உன் இசைபாட
நினைத்திருந்தேன். என்னே! நீஎன்
பாட்டுக்குப் பொருளாக நின்பிரிவுச்
செய்தியினைப் பாலித் தாயே!

பாட்டரசர் பாடுபுகழ் முத்தைய வேளே!
"இந்தப் பாரில், மன்னர்
நாட்டரசு நிலையல்ல; நமக்கரசு
வானரசே. நடப்போம்" என்று
சூட்டரசச் சேவலினுன் சுடரடியைச்
சேர்ந்தனையே! தொடும்எம் நெஞ்ச
வீட்டரசின், நீகொண்ட வீட்டரசு
விழுமியதோ? விளம்புவாயே!

இனத்துக்குச் சிறப்பளித்தாய்! யாவருக்கும்
கொடையளித்தாய்! இந்த நாட்டிற்
தினத்துக்குத் தினம்புதிய தொழில்அளித்தாய்!
அரியதமிழ்ச் செல்வம் என்னும்
அனைத்துக்கும் வாழ்வளித்தாய்! நின்பிரிவால்,
அன்புடையார் அவலங் கூர
மனத்துக்குத் துயரளித்தாய்! இதுதான்நின்
கருணைக்கு வரம்போ? ஐயா!

பார்பிடிக்கப் பாசறைகள் பலஅமைப்பர்
பிறஅரசர். பாரிற் பொன்ருச்
சீர்பிடிக்கச் செட்டிநாட் டரசர்கலைப்
பாசறையைச் செய்தார். நீயும்
ஊர்பிடிக்க எண்ணுதுஎம் உளம்பிடித்தாய்!
நம்தமிழர் உயர்வுக் கே நா-
ளேர்பிடித்தாய்! வளமையெனும் பயிர்வளர்த்தாய்!
வரலாற்றில் இடம் பெற்ருயே!

தில்லையிலே இவர்முன்னேர் பொன்வேய்ந்தார்.
இவர்ஐயா திகழும் தில்லை
எல்லையிலே கலைக்கோவில் எழுப்புவித்தார்.
இவர்தந்தை இனிது காத்தார்.
எல்லையிலாப் பணிஇவரும் புரிவர்என
எண்ணுமல், ஈசா! உன்பால்
ஒல்லையிலே அழைத்தனையே! உன்னைப்போல்
பெரும்பித்தர் ஒருவர் உண்டோ?

அருட்கவி அரங்க சீனிவாசன்

## சுகம் காண்கின்றேன்

வாடி வருவாரின் வாட்டச் சிறுசுமையைத்
தேடிக் குவித்திட்ட செல்வப் பெருஞ்சுமையால்
வேடிக்கை செய்து விரட்டிய கோமகனைப்
பாடிக் களித்தற்குப் பன்னூறு நாவேண்டும்.
கோடிக் கரம்வேண்டும் கும்பிட்டுப் பாட்டெழுத!
கோடிக் கரங்களுடன் கோதில்லா நானூறும்
தேடிப் பெறநல் திறமில்லா இவ்வேழை
நாடி ஒருகையால் நாஒன்றால் பாமாலை
சூடிக்காண் கின்றேன் சுகம்.

மழலைக்கவிஞர் நாக முத்தையா.

## குமாரராஜாவின் ஆவல்

மேன்மைக்கும், பெருமைக்கும் உரிய குமாரராஜா அவர்கள் மிக இனிய குணமும், சமூக நன்மைக்கான காரியங்களைச் செய்வதில் பேரார்வமும் உடையவர்கள். அவர்களால் உதவி பெற்ற இளைஞர்கள் பலர்.

நமது சங்கத்தின் செயற்குழுவிலும், கல்விக் குழுவிலும் அவர்கள் உறுப்பினராக இருந்து, ஆர்வமுடன் பணியாற்றினார்கள். அவர்களை முக்கிய உறுப்பினராகக் கொண்ட முதலீட்டுக் குழுக் கூட்டத்திற்கு எங்கள் அழைப்பை ஏற்று 25-3-70ஆம் நாள் காலை 10 மணிக்கு வருவதாக இருந்தார்கள். நான் சங்கச் செயலாளனான பிறகு அவர்களை முதன்முதலில் சந்திக்கிற வாய்ப்பினை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

இன்பமிக்க வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்த எனக்கு அவர்கள் இறைவனடி சேர்ந்துவிட்டார்கள் என்ற இடி போன்ற செய்தியே கிடைத்தது. பதறியபடியே அடையாற்று மாளிகையை அடைந்தேன். மறுநாள் அண்ணாகை அரசராகப் பார்க்க இருந்த அவர்களை, அமரராகப் பார்த்தேன்.

காலதேவனின் கொடுமையை எண்ணிக் கண்ணீர் உகுத்தேன். மாந்தருள் மாணிக்கம் ஒன்று மறைந்துவிட்டதே என்று கலங்கினேன். அவர்கள் ஆன்மா சாந்தி அடைய அருள்புரிய வேண்டுமென்று முருகனை வேண்டுகின்றேன்.

நகரத்தார் ஐக்கிய சங்கத்தை மிக வலுவுள்ள நல்ல சமூக அமைப்பாக வளர்க்க வேண்டுமென்று அவர்கள் எல்லையற்ற ஆவல் கொண்டிருந்தார்கள். அந்த ஆவலை நிறைவேற்றுவதற்கு நகரத்தார் அனைவரும் முழு அளவில் ஒத்துழைப்பு நல்க வேண்டுமென்று அன்புடன் வேண்டுகின்றேன்.

குமா. முருகப்பன்,
செயலாளர், நகரத்தார் ஐக்கிய சங்கம் சென்னை 1.

# வானுடு காப்பதற்கு மாமணியே போயினையோ!

தண்ணூர் தமிழ்வளர்க்கத் தாரணியில் வந்துதித்த
அண்ணு மலைபயந்த அன்புத் திருமகனும்
முத்தையா பெற்றெடுத்த முத்தே! முழுநிலவே!
தித்திக்கும் நல்லமுதே! தேனே! செழுந்தமிழே!
மங்கலங்கள் பொங்கிநிதம் மண்முழுதும் பொன்கொழித்த
எங்கள் திருநாட் டிளவரசே! முத்தையா!
கானுடு காத்தானைக் காத்தவனே! இன்றைக்கெம்
ஊனே டுயிராட உள்ளம் தழலாட
வானுடு காப்பதற்கு மாமணியே போயினையோ?
தேனுடும் வண்ணவண்ணப் பூநாடும் வண்டதுபோல்,
போனுயோ அங்கே புதுப்பதவி காண்பதற்கு?
ஏனென்று சொல்வதற்கும் ஏதும் தடையுண்டோ?
மெய்யம்மை ஈன்றளித்த மேன்மையனே! இவ்வுலகம்
பொய்யென்று தள்ளிவிட்டுப் போயினையோ வேறுலகம்?
அண்ணு மலைவள்ளல் ஆவலுடன் உன்முகத்தைக்
கண்ணுரக் கண்டு களிக்க விருப்பமுற்று
வானுலகம் வாவென்று வாயசைத்துச் சொன்னுரோ?
ஏனங்குச் சென்றுய்? இளவரசே! பேசிடுக!
ஊரார் வணங்க உலகோர் புகழ்விரிக்கச்
சீராக வாழ்ந்திருந்த செட்டிமக்கள் இன்றைக்கு
நேரான பாதையினை நீங்கி, அறவழியில்
சேராமல், நிற்பதனுல் சிந்தை மிகக்கலங்கிப்
பூமானே! போயினையோ பொன்னுலகில் வாழ்வதற்கு?
கோமான் மகனே! குலமுத்தே! ஒன்றுரைப்போம்:
சத்தியமாய் நாங்கள் தவறே இனிச்செய்யோம்.
உத்தமனே! வாழ்வாய்எம் உள்.

ந. செல்லப்பன், புதுவயல்




**பசுமை மிகுந்தவை; பாசம் நிறைந்தவை.**

இழப்பின் எல்லை-நல்லவர்களை இழப்பதுதான்! ஆயினும், வாழ்ந்து மறைந்த பெரியவர்களைப் பற்றிய எண்ணங்கள் வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கு வழிகாட்டும் வாடாமலர்கள்!

குமாரராஜா அவர்கள், இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள்—ஆகிய இருபேரொளிச் சுடர்களின் மறைவு குறித்து நாடெங்கும் நடைபெற்ற இரங்கற் கூட்டங்களும் அஞ்சலி நிகழ்ச்சிகளும் துயரம் மிகுந்தவை. என்றாலும் பசுமையும் பாசமும் மிகுந்தவை.

**தலைமையுரை**

நகரத்தார் ஐக்கிய சங்கத்தில் அன்னை அரசிக்கும் அவர்தம் அருமைப் பிள்ளை குமாரராஜா அவர்களுக்கும் நடைபெற்ற அனுதாபக் கூட்டத்திற்கு மேன்மைமிகு அ. மு. மு. அருணாசலம் செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். அவர்கள், ''பரம் பரையாக அறம் வளர்த்து வருகின்ற ஒரு குடும்பத்தில் இப்படிப்பட்ட தொரு துயர நிகழ்ச்சி நேர்ந்தது பெருந்துயரம் தருவதாகும். குமார ராஜா அவர்கள் இராணி அவர்கள் ஆகிய இருவரின் ஆன்மாக்களும் சாந்தியடைய இறைவனைப் பிரார்த்திக்கிறேன். செட்டி நாட்டு அரசர் அவர்களுக்கும் குமாரராணி அவர்களுக்கும் எம். ஏ. எம். இராமசாமி செட்டியார் அவர்களுக்கும் என் ஆழ்ந்த அனுதாபத் தைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று குறிப்பிட்டார்கள்.

**அன்புரைகள்**

மேன்மைமிகு சி. வி. சிடி. வி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள் உரையாற்றிய பொழுது, ''நான் செட்டி நாட்டு அரசர் குடும்பத்துக்கு நெருங்கிய உறவினன் ஆதலால், குமாரராஜா அவர் களுடைய உயர்ந்த குணங்களையும் இராணி அவர்களுடைய ஒப்பற்ற குணங்களையும் நன்கு அறிவேன். குமாரராஜா அவர்கள் இளமைக்

காலத்திலேயே பெருங்குணங்கள் நிறைந்தவர்களாகவும் இரக்கம் மிகுந்தவர்களாகவும் எந்த ஒரு காரியத்தையும் சொல்லிய வண்ணமே செய்கின்ற அருங்குணம் உடையவர்களாகவும் விளங்கினார்கள். அவர்களால் பயன்பெற்ற நிறுவனங்கள் பலவாகும்; பயன் பெற்ற இளைஞர்கள் பலராவர். அத்தகைய குமாரராஜா மறைந்தது ஈடுசெய்ய முடியாத நஷ்டமாகும்.

இராணியவர்கள் அன்பும் அறமும் உருவானவர்கள். இவ்வளவு என்று கணக்குச் சொல்ல முடியாத அளவிற்கு எல்லையற்றவர்கள் அவர்களால் உதவி பெற்றிருக்கிறார்கள். தாங்க முடியாத புத்திர சோகத்தால் அவர்களும் மறைந்துவிட்டார்கள்.

அவர்களுடைய ஆன்மாக்கள் சாந்தியடையப் பிரார்த்திக்கிறேன்'' என்று குறிப்பிட்டார்கள்.

அடுத்து, ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் அவர்களும், ஆவி. க. தியாகராசன் செட்டியார் அவர்களும், பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களும், எம். வி. எம். அழகப்பன் எம். ஏ. அவர்களும் பேசியபொழுது கீழ்க்கண்ட கருத்துக்களைக் குறிப்பிட்டார்கள்.

''குமாரராஜா அவர்கள் தங்களுக்குத் தொடர்புடைய நிறுவனங்களில் பணிபுரிவோர்க்கு மட்டுமல்லாமல் நகரத்தார் சமூகத்து இளைஞர்கள் அனைவர்க்குமே வழிகாட்டுபவர்களாகவும் உதவிகள் செய்பவர்களாகவும் விளங்கினார்கள்.

இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் தம் பிள்ளைகளுக்கு மட்டுமல்லாமல் அனைவருக்குமே அன்னையாகத் திகழ்ந்தவர்கள். அவர்களுடைய அருட்குணங்கள் எண்ணி எண்ணிப் போற்றத் தக்கவை.

குமாரராஜா அவர்களுடைய மறைவும் இராணி மெய்யம்மை ஆச்சி அவர்களுடைய மறைவும் நகரத்தார் மரபிற்கும் நாட்டிற்கும் பெரிய இழப்பாகும்,'' என்று குறிப்பிட்டார்கள்.

குமாரராஜா அவர்கள் இளமைக் காலத்திலேயே பெற்றிருந்த ஆற்றல் மிக்க குணங்களையும் சிறப்பு மிக்க இயல்புகளையும் விவரித்தார்கள். ''நாட்டு இளைஞர்கள் தங்கள் நல்லதொரு வழிகாட்டியை இழந்துவிட்டார்கள்.''

அடுத்து, நம் இதழாசிரியர், புலவர் அவர்கள் தம் ஆழ்ந்த ஆற்றாமையைக் கவிதை வடிவில் புலப்படுத்தினார்கள்.

வந்தாரை வரவேற்று, வருவாரை எதிர்பார்க்கும்
தங்கக் குணம் நிறைந்த எங்கள் அரசருக்கோ
இத்தகைய சோதனை?
பிறர்துயரம் துடைக்கின்ற பெருமைமிகு மீனாள் முத்துக்குப்
பெருந்துயரம் நேர்ந்ததென்ன?
இது இறைவனுக்கும் அடுக்குமோ? இத்துயரம் மாற்றுதற்கு
எளிதோ?

நல்லவரை வல்லவரை நாடுபுகழ் மன்னவரை
என்னவருய் இருஎன்று இறைவன் அழைத்துவிட்டான்!
அம்மட்டோ?
கணக்கற்ற பிள்ளையிங்குக் கனிவுக்குக் காத்திருக்க
ஒருபிள்ளை தனைத்தேடி உயர்அரசி போய்விட்டார்.
புகழ்மிகுந்த சரித்திரத்தில் புரியாத துயர்நிகழ்ச்சி!
கண்ணீர் தனைப்பெருக்கிக் கலங்கிமிக நோகின்றோம்—வேறு
என்செய்ய முடியுமென்று ஏங்கித் தவிக்கின்றோம்!
இளவரசர் ஆன்மாவும் ஏற்றமிகு பேரரசி ஆன்மாவும்
இறைவனடி சேர்வதற்கு என்னுடைய அஞ்சலிகள்
என்றென்றும் அஞ்சலிகள்!!

பின்னர், இளவரசர் அரசி ஆகியவர்களின் மறைவு குறித்து இரங்கல் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## குமாரராஜா அவர்களுக்கு

தமிழ் நாட்டிற்குத் தமிழிசை இயக்கத்தையும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தையும் அளித்த பெருங்கொடைவள்ளல் உயர்திரு ராஜா சர் அண்ணுமலை செட்டியார் அவர்களின் பேரரும், நம் சமூக முன்னேற்றத்தில் பேரார்வமும், எடுத்த செயல்களில் எல்லாம் வெற்றியும், பொதுநலப் பணிகளில் இடையருத ஈடுபாடும் கொண்ட நல்ல உள்ளம் படைத்த உயர்திரு ராஜா சர் மு. அ. முத்தைய செட்டியார் அவர்களின் தவப்புதல்வரும், தம்மை நாடிவந்த நகரத்தார் இளைஞர் பலருக்கு உயர்கல்வி பயில வாய்ப்பும், தாம் தொடர்பு கொண்டிருந்த வங்கி மற்றும் தொழில் நிறுவனங்களில் பலருக்கு வேலை வாய்ப்பும் அளித்து உதவிய அருளாளரும், நம் சங்கச் செயற்குழு உறுப்பினருமான நம் பெருமதிப்பிற்குரிய உயர்திரு குமாரராஜா மு. அ. மு. முத்தைய செட்டியார் அவர்கள் அண்மையில் இறைவனடி எய்தியதற்கு இச்சங்கம் தனது ஆழ்ந்த அனுதாபத்தை உயர்திரு ராஜா சர் மு. அ. முத்தைய செட்டியார் அவர்களுக்கும், அன்னரது குடும்பத்தாருக்கும் தெரிவித்துக் கொள்வதோடு, அன்னரது ஆன்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்தித்துக்கொள்கிறது.

## ராணி அவர்களுக்கு

மலர்முகம், அருள்நோக்கு, இனிய சொற்கள் கொண்ட நமது சங்கத் தலைவர் டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தைய செட்டியார் அவர்களின் அருமைத் துணைவியாரும், தம்மை நாடிவந்த எளிய நிலையிலுள்ள நகரத்தார் குடும்பத்தினர் பலருக்கும் உதவி அருளிய உத்தமியுமான திருமதி ராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் அண்மையில் இறைவனடி எய்தியதற்கு இச்சங்கம் தனது ஆழ்ந்த அனுதாபத்தை உயர்திரு ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்களுக்கும், அன்னரது குடும்பத்தினருக்கும் தெரிவித்துக் கொள்வதோடு, அவர்கள் ஆன்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்தித்துக்கொள்கிறது.

# திருச்சி நகரத்தார் சங்கத்தின் அஞ்சலி

உலகின் பல்வேறு சமூகப் பெருமக்களிடையே இரண்டறக் கலந்து இணையாகப் பழகிப் பேரும் புகழும் பெற்றுத் திகழ்கின்ற சமூகம் நம் சமூகம்.

நம்முடைய சிறப்புக்களையும் பழக்க வழக்கங்களையும் நன்கு உணர்ந்து, அவற்றிற்கு எல்லையில்லாத பெருமை உண்டு என்பதை ஆராய்ந்து அறிந்து நடைமுறையில் உயர்த்தி, நம் மரபினரின் பெருமையை நாட்டினர் அறிந்து போற்றும் வகை செய்த—செய்து வரும் தலையாய குடும்பம் இராஜா சர் குடும்பம்.

அவர்கள், சிறப்பாக நம் சமூக இளைஞர்கட்கும் ஏனையோருக்கும் செய்த—செய்துவரும் பணிகள், உதவிகள் நினைந்து நினைந்து போற்றற்குரியன.

அத்தகு தலையாய குடும்பத்தின் இன்றைத் தலைமகன் உயர்திரு. இராஜா சர் முத்தைய செட்டியார் அவர்களின் திருக்குமாரர், குமாரராஜா மு. அ. மு. முத்தைய செட்டியார் அவர்களின் அகால மரணம் நம் சமூகத்திற்குப் பேரிழப்பாகும்!

தாத்தா, தந்தை இருவரின் சமூகப் பணியையும் குலப் பற்று தலையும் கண்ணுற்று, குமாரராஜா மு. அ. மு. முத்தைய செட்டியார் அவர்கள் செய்ய நினைந்து, செயல்படுத்தத் திட்டமிட்ட காரியங்கள் எத்தனை எத்தனையோ! அவை யாவும் அவர்தம் அகால மரணத்தால் நிறைவேறாது போயின என்பது நினைந்து வருந்தற்குரியது.

அவரின் மறைவால் துயரில் ஆழ்ந்துள்ள அவரின் குடும்பத்தினர் அனைவருக்கும் நம் செட்டியார் சமூகம் நன்றி கலந்த அனுதாபத்தையும் ஏக்கம் நிறைந்த ஆறுதலையும் இச் சிறப்பிதழின் வாயிலாய்த் தெரிவிப்பதாக!

வாழ்க, வளர்க – இராஜா சர் அவர்களின் குடும்பமும் அவர்தம் சமூகப் பணியும் பற்றுதலும்!

**ஆவி. க. ஆவிச்சி செட்டியார்,**
தலைவர்.

**பிச. பழ. மெய்யப்பன்,**
பொருளாளர்.

**எஸ். அண்ணாமலை**
**எஸ். சுந்தரம் பி. இ.,**
செயலாளர்கள்.

# ஷெரீப் அவர்கள் அமைத்த கூட்டம்

குமார ராஜாவின் மறைவு குறித்து அனுதாபப் படாதார் யாருமில்லை.

அவர்பாலும் செட்டிநாட்டரசர் குடும்பத்தின்பாலும் அன்பு கொண்டவர்கள் அனைவரும் ஒன்றுகூடித் தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டது போல அமைந்தது சென்னை நகர ஷெரீப் மேன்மை மிகு சிவசைலம் அவர்கள் அமைத்த கூட்டம். அந்தக் கூட்டம் 29-4-70ஆம் நாள் ராஜாஜி மண்டபத்தில் நடைபெற்றது.

†

## ஷெரீப் அவர்களின் துவக்க உரை

சென்னை நகரத்தின் பிரமுகர்கள், மற்றும் பலரின் வேண்டு கோளுக்கிணங்க இந்த அனுதாபக் கூட்டத்தைக் கூட்டியுள்ளோம். நண்பர்களே! குமார ராஜா அவர்களின் மறைவினால் ஏற்பட்டுள்ள துயரத்தை வார்த்தைகளால் விவரிக்க என்னால் இயலவில்லை.

1929ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 5ஆம் நாள் பிறந்த குமாரராஜா அவர்கள் வர்த்தகத் தொடர்பு கொண்டது முதல் தேர்ந்ததொரு வணிகராகத் திகழ்ந்தார். நம் மாநிலத்தில் உள்ள பல தொழில் நிறுவனங்களில் மிகக் குறிப்பிடத்தக்க பொறுப்புக்களை வகித்தார். அவர் தொடர்பு கொண்டிருந்த நிறுவனங்கள் பலவாகும்.

வர்த்தகத் துறையில் அவர் ஆற்றிய பணிகளை மதித்து இள வயதிலேயே 1957ஆம் ஆண்டிலேயே அரசு அவரை சென்னை செரீப்பாக நியமித்தது. 1958ஆம் ஆண்டு முதல் 1961ஆம் ஆண்டு வரை மூன்று ஆண்டுகள் தென்னிந்திய வர்த்தக சபைத் தலைவராக விளங்கினார்.

தொழில் துறையில் சிறந்து விளங்கியதோடு அன்னார் சிறந்த விளையாட்டு வீரராகவும் சமூக வளர்ச்சியில் மிகுந்த அக்கறை கொண்டவராகவும் திகழ்ந்தார்.

எல்லாராலும் போற்றப்பட்ட ஒரு குடிமகனை அவர் தம் 41ஆம் ஆண்டில் ஏற்பட்ட மறைவால் இழந்துவிட்டோம்.

சென்னை நகர மக்களின் சார்பில் வருத்தத்தைத் தெரிவிக்க விழைகின்றேன் – இன்று இங்குக் கூடியுள்ள மக்கள் தொகையே அவர் புகழையும், அவர் இழப்பினால் மக்களுக்கு ஏற்பட்டுள்ள துயரத்தையும் தெளிவாகக் காட்டுகின்றது.

## அனுதாபத் தீர்மானம்

ஷெரீப் அவர்கள் பேச்சைத் தொடர்ந்து அனுதாபத் தீர்மானத்தை வாசித்தார்கள்.

1970ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 29ஆம் நாள் புதன்கிழமை மாலை 6 மணிக்கு ராஜாஜி ஹாலில் ஷெரீப்பால் கூட்டப்பட்ட மக்கள் பொதுக்கூட்டம்.

செட்டிநாட்டு இளவரசர் எம். ஏ. எம். முத்தையா செட்டியார் அவர்களின் நினைவு அனுதாபத் தீர்மானம்:

சென்னை ஷெரீப்பால் கூட்டப்பெற்ற சென்னை மக்களின் பொதுக்கூட்டம் 1957ஆம் ஆண்டு சென்னை ஷெரீப்பாக இருந்த, அனைவராலும் அறியப்பெற்ற ஒரு குடிமகனின் எதிர்பாராத மறைவு குறித்துத் தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிக்கிறது. வாழ்க்கையில் முதல் படியிலேயே ஏற்பட்ட அவர் மறைவு, தமிழகத்தில், தொழில் கல்வித் துறைகளில் சிறந்த ஒரு மனிதனை அபகரித்துக் கொண்டுவிட்டது.

விளையாட்டிலும், பொது நடவடிக்கைகளிலும் அவருக்கிருந்த ஈடுபாடும் அறப் பணிகளில் அவர் கூட்டுறவும் இணைந்து அவரை ஒரு தலை சிறந்த குடிமகனாக ஆக்கியது.

இக்கூட்டம் ராஜா சர் முத்தைய செட்டியார் குமார ராணி முத்தைய செட்டியார் மற்றும் துயரத்தில் ஆழ்ந்துள்ள அன்னாரின் குடும்பத்தினருக்கும் தன் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கின்றது.

பொதுமக்கள் சார்பாக சென்னை செரீப்

## பெருமக்களின் செய்திகள்

தீர்மானத்தைத் தொடர்ந்து இந்தியப் பெருநாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்த பல பெருமக்கள் அனுப்பிய அனுதாபச் செய்திகளை ஷெரீப் அவர்கள் படித்தார்கள். அவை பல்வேறு பகுதி மக்களின் உணர்ச்சிகளையும் குமாரராஜா மீது அவர்கள் கொண்டிருந்த மதிப்பையும் விளக்குவனவாக அமைந்திருந்தன. அப்படி அனுப்பிய சிலரைப் பற்றி நாமும் அறிந்துகொள்வோம்.

மேன்மைமிகு சர்தார் உஜ்ஜல்சிங் சென்னை கவர்னர்
,, கோபால ரெட்டி உ. பி. கவர்னர்
,, டாக்டர் எஸ். சந்திரசேகர் மத்திய அமைச்சர்.
,, ஆர். வெங்கட்டராமன் திட்டக்கமிஷன் உறுப்பினர்.
,, மைசூர் அரசர்
,, திருவாங்கூர் அரசர்
,, புதுக்கோட்டை அரசர்
,, எம். பக்தவத்சலம்
,, எச். வி. ஆர். ஐயங்கார்
,, ஏ. ராமசாமி முதலியார்

## டாக்டர் பி. வி. ராஜமன்னர் அவர்களின் உரை

குமாரராஜா தம் குறுகிய வயதில் ஆற்றியுள்ள பணிகள் மிகச் சிறப்பானவையாகும். அவர் பாட்டனர் தந்தை இவர்கள் வழி நின்றவர். இவற்றை எண்ணுகின்றபொழுது நம் துயரம் பன்மடங்காகப் பெருகுகின்றது. அவர் பல்வேறு துறைகளில் தொடர்பு கொண்டிருந்தார். செட்டிநாட்டு அரசரின் மூத்தமகனுக வெள்ளிக் கிண்ணத்தோடு பிறந்திருந்தாலும் அவர் மிகச் சிறந்த உழைப்பாளியாக விளங்கினர். தாம் தொடர்புகொண்ட எல்லா நிறுவனங்களிலும் மிகுந்த அக்கறை காட்டுபவராகத் திகழ்ந்தார்.

நானும் அவரும் தோழர்களாக இரண்டு நிறுவனங்களில் தொடர்புகொண்டிருந்தோம். அந்த அனுபவத்தைக் கூற விரும்புகிறேன். அந்த நிறுவனங்கள், இந்தியன் பாங்கி, செட்டிநாடு சிமிண்ட் கார்ப்பொரேஷன் ஆகியவை.

அவர் தம் கடும் உழைப்புடன் வியாபாரத் திறனை இணைத்தார்.

அவர் அவசரமின்றி ஆனுல் விரைவாக, சமாதானமாக, தீர்மானமாக உறுதியுடன், இறுமாப்பின்றி, தவறின்றி திடமாகச் செயலாற்றும் திறமையை பெற்றவர்.

தனி மனிதர் என்ற நிலையிலும் அவர் குணங்கள் என்னைக் கவர்ந்தன. அவர் ஓர் உண்மையான நண்பர். அவரை என்றும் ஒரு சகோதரராகவே எண்ணிவந்தேன். எத்தனை கடுமையான தொழில் பணிகள் இருப்பினும் அவர் பொதுநலப் பணிகளிலும் பங்கு கொண்டிருந்தார்.

தென்னிந்தியாவின் ஓர் ஒப்பற்ற உயர்ந்த குடும்பத்தின் வழி வந்தவராகையால் திருவள்ளுவர் கூறும் நற்பண்புகள் இவரிடம் காணப்பட்டன.

நகை ஈகை இன்சொல் இகழாமை இந்நான்கும்
வகை என்ப வாழும் உயிர்க்கு.

குமாரராஜா இவை அனைத்தையும் ஒருங்கே பெற்றவர் என்று கூறிய அவர்கள் மேன்மைமிகு ஷெரீப் அவர்களின் தீர்மானத்தை ஆதரித்தார்கள்.

## கிளப்வாலா ஜாதவ் அவர்களின் உரை

இது ஒரு துக்கமான நேரம் ஆகும். வாழ்க்கையின் உதயத்தி லேயே குமாரராஜா மரணத்தினல் அபகரிக்கப்பட்டார். அவரை நான் அவருடைய குழந்தைப் பருவத்திலிருந்தே அறிவேன். அவர் தன் இனிய பண்புகளால் ஓர் ஒப்பற்ற மனிதராகக் காட்சிதந்தார். அவருடைய பணிகளுக்கெல்லாம் சிகரமாக பல அறச் செயல்களில் அவர் காட்டிய ஆர்வத்தைச் சமூக சேவகியான என்னுல் பாராட்டா திருக்க முடியவில்லை.

## டி. சி. கோத்தாரி அவர்களின் உரை

இங்கு நிறைந்துள்ள அனைவருமே காலம் சென்ற குமாரராஜா அவர்களை ஏதேனும் ஒருவகையில் அறிந்தவர்களாகவே இருப் பார்கள். ஐம்பது ஆண்டுகளாக (அவர்கள் பாட்டனுர் காலம் தொட்டு) அன்னுரின் குடும்பம் தென்னிந்தியாவில் தனி இடத்தைப் பெற்று விளங்குகிறது. ஒருவன் உயர்ந்தவனுகப் பிறப்பதோடு உயர்ந்தவனுக வாழவும் வேண்டும். தன்னைவிடத் தாழ்ந்தவர்களுக்கு உதவியதன் மூலமும் பலருக்கு வேலைவாய்ப்பு அளித்ததன் மூலமும் இவற்றிற்கு மேலாக சமூகத்தில் ஒரு போற்றத்தக்க மனிதராக விளங்கியதாலும் அவர் என்றும் உயர்ந்தவராகவே விளங்கினுர்.

என் தந்தை 1918-ஆம் ஆண்டு சென்னைக்கு வந்து வியாபாரத் தைத் துவக்கியபொழுது சந்தித்த முதல்மனிதர் காலம் சென்ற குமாரராஜா அவர்களின் பாட்டனுர்தாம். அவர் பெரும் அளவில் தொழிலுக்கு உதவியதோடு முதலில் சென்னை ஸ்டாக் எக்சேஞ் ஆரம்பிக்கவும் காரணமாக இருந்தார். அப்பொழுதிருந்தே எங்கள் குடும்பங்கள் நட்புறவு கொண்டன. செட்டிநாட்டரசர் குடும்பத் துடன் எங்களுக்கு என்றும் நெருங்கிய தொடர்பு உண்டு. அவர் களின் பெருந்தன்மை, அடக்கம், பொது வாழ்வில் ஈடுபாடு, தங்களைச் சுற்றியுள்ளவர்களுக்கு உதவும் பண்பு ஆகியவற்றை நான் நேரில் அறிந்தவன். என் பிள்ளைகளுக்கு அவர்களை நான் உதாரணமாகக் கூறியுள்ளேன். தன் சக்திக்கு உட்பட்ட எந்த உதவியையும் எப்பொழுதும் செய்யக் குமாரராஜா ஒருபோதும் தயங்கியதில்லை.

## மாண்புமிகு மதியழகன் அவர்கள் உரை

குமாரராஜா திரு. முத்தையா அவர்கள், ஒரு பெரிய குடும் பத்திலே, செல்வக் குடும்பத்திலே பிறந்தாலுங்கூட, அப்படிப்பட்ட ஒரு பெரிய செல்வக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்ற தன்மை இன்றி, மிகுந்த அடக்கத்தோடு நடந்துகொண்டவர். அரசர் குடும் பத்தினர் வள்ளல் தன்மையும், செல்வர்களாக இருந்தாலும், பொது வாழ்வில் நல்ல காரியங்களில் ஈடுபடுகிற தன்மையும், வசதிகள், வாய்ப்புகள் இருந்தாலும் மனிதப் பண்போடு பலருடைய பேரன்பைப் பெற்றிருக்கிற தன்மையும் வாய்த்தவர்கள்.

இந்தக் குடும்பத்திற்குரிய மரபுகள், பெருமைகள் வெளியே பலருக்குத் தெரியாமல் இருந்தாலும் அவர்களோடு பழகுகிற வாய்ப்பைப் பெற்றிருந்த நான் நன்கு அறிவேன். குமாரராஜா அவர்கள் அடக்கமாகவும் கனிவாகவும், இவ்வளவு பெரிய குடும்பத் தைச்சார்ந்தவர் என்ற தன்மையில்லாமல் இனிமையாகவும் இருந் தவர்கள். அவர்களுடைய மறைவு அவர்களுடைய குடும்பத்திற்கு மட்டுமல்லாமல், நல்ல பண்புகளுக்குக்கூட ஒரு மறைவுதான் என்று நான் சொல்லுவேன்.

## பாலசுப்பிரமணிய ஐயர் பி.ஏ.பிஎல். அவர்கள் உரை

குமாரராஜா அவர்களுடைய தகப்பனுர் இன்று எத்தகைய வருத்தமடைவார்களோ அத்தகைய வருத்தத்தையே நானும் அடைகிறேன்.

ஐம்பது, ஐம்பத்தைந்து வருடங்களாக அரசர் குடும்பத்தோடு எனக்குத் தொடர்பு உண்டு.

குமாரராஜா அவர்களுடைய சிரிப்பை நாம் ஒருநாளும் மறக்க முடியாது. ஒருநாளும் அவர்கள் முகத்திலே கோபக் குறிகாட்டியதே இல்லை.

தாயார், தகப்பனுர் ஆகியவர்களிடத்தில் குமாரராஜா அவர்களுக்கு இருந்த பக்திக்கு அளவே இல்லை.

முரண்பாடான காரியத்தை ஒழுங்குபடுத்திச் செய்வது என்பது எளிதான காரியமல்ல. அது பலரால் முடியாது. அதை இந்தச் சிறு வயதிலேயே குமாரராஜா அவர்கள் எப்படிச் செய்தார்கள் என்றுதான் நாம் எல்லாரும் ஆச்சரியப்படவேண்டும்.

அவர்களுடைய திறமைகளையெல்லாம் பார்க்கிறபொழுது, ஒரு முதிர்ந்த தலை சிறுதோளில் இருந்தது என்று சொல்வது போல் "A mature head on young shoulders," இருந்தது.

## சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள் உரை

பெரியவர்கள் இறந்துவிட்டால், அவர்கள் எவ்வளவு வயதானவர்களாக இருந்தாலுங்கூட, அனுதாப உணர்ச்சி ஏற்படுவது எல்லோருக்கும் இயல்பு. அதிலும் நாற்பது, நாற்பத்தொரு வயதில் மிகப் பெரிய பொறுப்புக்கள் எதிரே வந்து நிற்கிற நேரத்தில் ஒருவர் இறந்தார் என்றல், அவர் அறிமுகமான குடும்பத்தைச் சேர்ந்தவராக இல்லாவிட்டாலும் நெருங்கிப் பழகிய நண்பராக இல்லாவிட்டாலும் யாருக்கும் அனுதாபம் ஏற்படுவதே இயற்கை. அதிலும் அறிமுகமான குடும்பத்தைச் சார்ந்த ஒருவர், பழக்கத்திற்குரிய ஒருவர், தந்தையார் பாட்டனுர் வழி நாட்டுக்குப் பல பணிகளைச் செய்துவந்த குடும்பத்தின் வாரிசாக வந்த ஒருவர் அகால மரணம் அடைந்தார் என்றல். உண்மையில் இந்த அனுதாபக் கூட்டம் அனுதாபம் என்பதற்கான பூரண இலக்கணம் பொருந்திய கூட்டமாகத்தான் இருக்கிறது என்பதை நாம் பார்க்கிரேம்.

முத்தையா அவர்கள் தம் தந்தையார் அவர்களின் பெயரைத் தாங்கியிருந்தார்கள் என்பது மட்டுமல்ல. தந்தையார் அவர்களின் பெருமைகளையும் தாங்கியிருக்கக்கூடிய தரத்தையும், திறத்தையும் பெற்று வளர்ந்துவந்தவர். அவர்கள் இறந்த செய்தியைக் கேட்டு இல்லத்திற்குச் சென்று நான் பார்த்தபோது, அவர்களுடைய தந்தையார் படுக்கையிற் கிடந்து பொருமிக்கொண்டிருந்ததைப் பார்த்தபோது, இராமன் வனம் போகிருன் என்ற செய்தியைக் கேட்டு, தயரதன் படுக்கையிற் புரண்டு வருந்திய இலக்கியந்தான் என் நினைவுக்கு வந்தது.

அன்று அரசர் அவர்கள் சொன்ன வார்த்தைகள் இன்றும் எனக்கு அப்படியே நினைவில் பதிந்துள்ளன. "எனக்குப் பிள்ளையும் அவன்தான், பேரனும் அவன்தான்" என்று சொன்னார்கள். அதோடு என் மகனுடைய உயிரைக் காப்பாற்ற ஒரு சல்லிக் காசு கூடச் செலவழிக்கச் சந்தர்ப்பம் இல்லாமற் போய்விட்டது என்றும் சொன்னார்கள்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, ஏதோ ஒரு சக்தி, நமக்கொரு ஞானத்தைப் புகட்ட இத்தகைய சந்தர்ப்பங்களை நல்குகிறது என்றுதான் நான் எண்ணுகிறேன். போகும் உயிரை எவ்வளவு செலவழித்தும் காப்பாற்ற முடியவில்லை. எவ்வளவு செலவழித்தும் காப்பாற்றத் தயாராக இருந்தும் செலவழிக்க வாய்ப்பில்லை. செலவு செய்வதாலேயோ, முயற்சியாலேயோ, முயற்சியின்மையாலேயோ உயிர் போவதும் இருப்பதும் இல்லை. இத்தகைய மரணங்கள் சந்தர்ப்ப நிர்ப்பந்தம் காரணமாக நம்முடைய ஆணவத்துக்குச் சரியான பாடமாக அமைவதைப் பார்க்கிறோம்.

## ஏ. நாகப்பச் செட்டியார் அவர்கள் உரை

குமாரராஜா அவர்கள் என்னோடு பதினைந்து ஆண்டுகளாகப் பழகியவர்கள். நான் லண்டனில் இருந்தபோது, இந்தத் துயரச் செய்தி கிடைத்தது. என்றால் அதை நம்பவே முடியவில்லை.

இந்த நண்பர் நாற்பது வயதிலே இப்படிப் போய்விடுவார் என்று நாங்கள் எண்ணவேயில்லை. நான்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு, செட்டிநாடு சிமிண்டு கார்ப்பரேஷனுக்கு மிஷினரி வாங்குவதற்காக அவர்கள் ஐரோப்பாவுக்குச் சென்றார்கள். அன்று வீயன்னாவிலே ஏர் இந்தியா விமானம் கீழே விழுந்துவிட்டது. அதிலே இவர்களும் இருந்தார்கள். அதிலே உயிர் தப்பி வந்தார்கள். அவர்களை நான் பாரிஸில் போய்ப் பார்த்தபோது, நீங்கள் இன்னும் நூறாண்டுகளுக்குமேல் இருப்பீர்கள் என்று சொன்னேன். அது பொய்யாகிவிட்டது.

## செரீப் அவர்களின் நன்றியுரை

செரிப் அவர்கள் கூட்டத்தில் உரையாற்றிய அனைவருக்கும் நன்றி கூறினார்கள். தீர்மானத்தை ஆதரிக்குமாறு அனைவரையும் கேட்டுக்கொண்டார்கள். தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப் பெற்றது.

## தென்ஆர்க்காடு நகரத்தார் சங்க அனுதாபத் தீர்மானம்

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் தில்லை நடராஜருக்கும் கோவிந்தராஜப் பெருமாளுக்கும் குடமுழுக்குச் செய்தும், பலபேரறக் கட்டளைகளை அமைத்தும், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய பெருங்கொடை வள்ளல் செட்டிநாட்டரசர் ராஜா சர் மு. அண்ணா

மலைச் செட்டியார் அவர்களின் பேரரும் அண்ணாமலைப் பல்கலைக்கழக இணைவேந்தர் அண்ணாமலையரசர் நிறுவிய அறங்களைக் கண்ணெனக் கருதிக் காக்கும் செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தைய செட்டியார் அவர்களின் மூத்த புதல்வருமான குமாரராஜா உயர்திரு மு. அ. மு. முத்தைய செட்டியார் அவர்கள் 24–1–70ஆம் நாள் இறைவன் இணையடி நிழலை எய்திய செய்தியைக் கேட்டு தென்னூற்காடு சங்க உறுப்பினர்களாகிய நாங்கள் அனைவரும் வருந்துகிறோம். எண்ணிறந்த வணிக நிலையங்கள், தொழிலகங்களின் தலைவராகத் திகழ்ந்த குமாரராஜா அவர்கள் எத்தனையோ திட்டங்கள் தீட்டி செயலாக்கி நம் குலப் பெருமையைக் கூட்டுதற்கு எண்ணினார்கள். எதிர்பாராது ஏற்பட்ட அவர்கள் மறைவு நமது சமுதாயத்திற்கு ஏற்பட்ட பேரிழப்பாகும். மூத்த புதல்வரைப் பிரிந்து துயரக் கடலில் ஆழ்ந்திருக்கும் ராஜா அவர்களுக்கும் அவர்கள் குடும்பத்தினர்க்கும் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதுடன் குமாரராஜா அவர்களின் ஆன்மா சாந்தியடைய ஆண்டவனை வேண்டுகிறது.

சுப. சேதுராமன் செட்டியார்
தலைவர்
ராம. கருப்பையா செட்டியார்
எஸ். சேதுராமன்
துணைத்தலைவர்கள்

சுப. திண்ணப்பன்
எம்.ஏ., எம்.லிட்.,
எம். தேனப்பன் பி.இ.,
செயலாளர்கள்
வெ. பழனியப்பன் எம்.ஏ.,
பொருளாளர்

## கானாடுகாத்தான் சீதா மாதர் சங்கத்தின் அனுதாபம்

குமாரராஜா, ராணி மெய்யம்மை ஆச்சி இவர்களின் மறைவு குறித்து அனுதாபக் கூட்டங்கள் கா. அ. பெ. க. சுப. சீதை ஆச்சியவர்கள் தலைமையில் நடைபெற்றன.

குமாரராஜா எம். ஏ. எம். முத்தைய செட்டியார் அவர்கள் மரணமடைந்த செய்தியை யறிந்து சீதா மாதர் சங்க அங்கத்தினர்கள் தங்கள் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

கா. அ. பெ. க. சுப. சீதை ஆச்சி,

ஏ. என். விசாலாட்சி
கே. ஆர். பொன்னழகி
பி. மீனா
பி. ஆர். சொர்ணம்

ஏ. மெய்யம்மை
எம். ஆர். சோலைச்சி
சிடி. தெய்வானை
எம். ஆர். காவேரி

இராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் நாட்டுக்காகவும் முக்கியமாகக் குழந்தைகளுக்காகவும் பெண்களுக்காகவும் நிறையப் பணி செய்துள்ளார்கள். பெண்கள் சமூகத்துக்காகப் பாடுபட்ட அன்னையார் மறைவுக்கு எங்கள் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| கா. அ. பெ. க. சுப. சீதை ஆச்சி, தலைவர் | மஞ்சுளாபாய் வைசு அமைப்பாளர் |
| உண்ணாமுலை ஆச்சி | கே. பி. பொன்னுள் |
| ராம. தெய்வானை ஆச்சி | பி. ஆர் சொர்ணம் |
| அ. அழகம்மை ஆச்சி | ஏ. மெய்யம்மை |
| எஸ்பி. சுலோசனு | சி. மீனுள் |
| முரு. பார்வதி யாச்சி | ஆர். மல்லிகா |
| சி. நாச்சம்மை யாச்சி | வி. கலா |
| எம். ஆர். சோலைச்சி | எம். ஆர். காவேரி |

## திருச்சி மக்களின் நல்வாழ்த்து

குமாரராஜா அவர்கள் சென்னை நகர செரீப் ஆனபோது திருச்சி மக்கள் சார்பாகப் பாராட்டிதழ் ஒன்று வாசித்தளித்தார்கள். அது என்றென்றும் நினைவில் நிற்கத்தக்க நிகழ்ச்சியாகும். அதிலிருந்து சில பகுதிகளை நினைவு கூர்வோம்.

பல நிறுவனங்களில் பங்கேற்றுப் பொன்றுப் புகழுடன் விளங்கும் தங்களை அரசியலார் சென்னை நகரத்தின் செரீபாக நியமித்ததால் அப்பதவிக்கே ஒப்புயர்வற்ற பெருஞ் சிறப்பினைத் தேடித்தந் துள்ளனர்.

நல்லவர்கள் பலரும் போற்றும் நிலையங்கள் பல தங்களை அங்க மாகப் பெற்று நன்னிலையடைந்து வருகின்றன. இன்றும் என்றும் இந்நிலை வளரத் தாங்கள் குன்றுப் புகழும் குறையாச் செல்வமும் நிறைந்த வாழ்வும் நினைத்ததில் வெற்றியும் பெற்று பொங்குபுனற் பொன்னி மணலினும் பல நாள் வாழ்க! வாழ்க!! என உளமகிழ்ந்து வாழ்த்துகிறோம்.

| | |
|---|---|
| தி. நா. இராமசாமி | தி. பொ. மாணிக்கவாசகம் |
| கே. ராசகோபால் பிள்ளை | தி. பொ. பாலசுப்பிரமணியம் |
| த. மா. திருநாவுக்கரசு | ஏ. எம். ஐ. சி. இ. (இந்த்) |

## என்றும் வாழ்வார்

திருச்சி மக்கள் சார்பாகப் பாராட்டு வழங்கப்பெற்றது 25-1-1958. குமாரராஜா அவர்கள் மறைந்தது 24-1-70. மேற் கண்ட பாராட்டிற்குப் பின் சரியாக ஒரு மாமாங்கம் அவர்கள் இவ் வுலகத்தில் வாழ்ந்தார்கள். அப்பொழுதும் அதற்கு முன்னும் அவர்கள் அமைதியான முறையில் ஆற்றிய பணிகள் எண்ணற் றவை. இன்று அவர்கள் நம்மிடையே இல்லையென்றாலும் பொங்கு புனற் பொன்னி மணலினும் பல நாள் வாழ்க என்ற மேற்குறித்த பாராட்டின்படி அண்ணல் அன்பர் இளவரசர் நம் மரபிற்கும் நாட் டிற்கும் நலம் தந்த செல்வர் எம். ஏ. எம். முத்தைய செட்டியார் அவர்களுடைய புகழ் என்றென்றும் வாழும்.




## 8. அவன் எழுதும் கணக்கு

நல்ல குடும்பத்தை, பல்கலைக் கழகம் என்றும் மண்மீது உருவான சொர்க்கம் என்றும் வருணிக்கிறோம்.

நல்ல குடும்பத்தை, நீதியை எடுத்துக் காட்டுவதற்கு நிலைக்களனாக விளங்குகின்ற தராசிற்கும் ஒப்பிடலாம் அல்லவா?

கணவனும் மனைவியும் தராசின் இரு தட்டுக்களாக விளங்குகிறார்கள். சமப்படுத்திக் காட்டுகின்ற முள் அன்பாக விளங்குகிறது.

எந்தத் தட்டு தாழ்ந்தாலும், அன்பு தாழ்ந்து விடுகிறது.

கணவனும் மனைவியும் தராசுத் தட்டுக்களைப் போல விளங்குகின்ற இல்லங்களில் குடும்ப நீதி கொலுவிருக்கும்.

சில இல்லங்களில் கணவனும் மனைவியும் சாப்பாட்டுத் தட்டுக்களைப் போல வாழ்கிறார்கள். அதற்கென்று என்ன பெருமை இருக்கிறது? கழுவி அடுக்குகிறபொழுது, யாருடைய தட்டை மேலே அடுக்குகிறோம் என்று பார்த்துக்கொண்டா வைக்கிறோம்? அப்படித்தான் பெருமையில்லாமல், உள்ளம் ஒன்றிய நிலையில்லாமல் அந்தத் தம்பதிகள் வாழ்கிறார்கள்.

சில குடும்பங்களில் கணவனோ, மனைவியோ, ஒருவர் பிச்சையெடுக்கும் தட்டைப் போலத் தாழ்ந்தும், மற்றொருவர் பிச்சை போடுகிறவர்போல அதிகார நோக்கம் உடையவராகவும் வாழ்கிறார்கள்.

அதுவரை கதவு ஓரமாக நின்று ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த மங்கையாச்சி தாமும் காசிச் செட்டியாரும் இருந்த இடத்திற்கு அருகில் வந்து அமர்ந்ததும், அருணசல ஐயாவிற்கு இந்த எண்ணங்கள் தாம் தோன்றின.

இராமநாதன் செட்டியார், சிதை ஆச்சி போலத் தராசுத் தட்டுக்களாக வாழ முடியாவிட்டாலும், சாப்பாட்டுத் தட்டுக்களைப் போலவாவது வாழலாமே! இந்தக் காசியைப் பிச்சைத் தட்டாக்கி, இந்த மங்கை பிச்சை போடும் முதலாளி போலவே நடந்துகொள்கிறாளே! என்று அவர்கள் நினைத்து வேதனை யடைந்தார்கள்.

"ஐயா என்ன சொல்றாக?" என்று அங்கே நிலவிய மௌனத்தை மங்கையாச்சி கலைத்தார்கள்.

காசிச் செட்டியார் ஒன்றுமே அறியாதவர்களைப் போல, அதற்குப் பதில் ஒன்றும் சொல்லாதிருந்தார்கள். அவர்கள் சொல்வார்கள் என்று எண்ணி ஐயா பேசாமல் இருந்தார்கள்.

“எனக்குத் தெரியப்படாத விஷயம்னு நான் எழுந்திரிச்சுப் போறேன். அவுகதான் வாயைத் தொறக்காமெ இருக்காகண்ணு ஐயாவுமில்ல பேசாமெ இருக்காக” என்று மங்கை யாச்சி சொல்லிவிட்டு, ஆடாமல் அசையாமல் அங்கேயே உட்கார்ந்திருந்தார்கள்.

தாம் வந்தது முதல், காசியோடு மனம்விட்டுப் பேச முடியாமல் அந்த இடத்தையே சுற்றி வருகின்ற மங்கை “மேப் பேச்சே பேசுகிருளே” என்று ஐயா நினைத்தார்கள்.

“உனக்குத் தெரியப்படாதுன்னு என்ன ஆத்தா இருக்கு? உன் நாத்தனு வீடு பொண்ணுக்குக் கல்யாணம் பேசி இருக்காக. அது விஷயமாத்தான் நான் வந்தேன்” என்று ஐயா வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு அமைதியாகச் சொன்னுர்கள்.

“எங்களுக்கும் அவகளுக்கும்தான் கூட்டுநாட்டு அத்துப் போச்சே! அது ஊருக்கெல்லாம் தெரியும். பெரியவக வந்திட்டீக. நீங்களே சொல்லுங்க. அவகளோடே கூடிக்கிறதுக்கு என்ன ஞாயம் இருக்கு?” என்று ஞாயத்திலேயே பிறந்து வளர்ந்து வாழ்கிறவர்கள்போல மங்கை ஆச்சி கேட்டார்கள்.

“கூடிக்காம இருக்கிறதுக்கு என்ன ஞாயம் இருக்கு?”

“பெரியவக. ஒண்ணும் தெரியாதுபோல இப்படிக் கேட்டா, நாங்க என்னத்தைச் சொல்றது?”

“மங்கை! நீ சொன்னுலும் சொல்லாட்டியும் நான் பெரியவன்தான். கூட்டுநாட்டு அத்துப் போகக் கூடாதுங்கிறதுக்காகத்தான் நான் வந்திருக்கிறேன்.”

“நாங்க அவுகளோடே கூடிக்கிட்டா, ஊரு ஒலகம் சிரிக்கும். நாங்களும் உப்புப் போட்டுத்தான்யா சாப்பிடறேம்.”

“யார் இல்லேண்ணு? ஆனு மத்தவங்களும் உப்புப் போட்டுத்தான் சாப்பிடருகங்கிறதை நீ மறந்துறப் படாது.”

“சுத்திச்சுத்தி அவகதான் ஒசத்திண்ணு நீங்க பேசுவிக. நிண்ணது நிக்க, கழுத்திலே கத்தி வச்ச மாதிரி கடையிலே நாங்க போட்ட பணத்தைத்தாங் கண்ணு கேட்டாக. அப்ப, இவக கல்லுப் பிள்ளையாரு மாதிரி இருந்தாக. நான் என் ஆத்தாகிட்டே போயி அழுதேன். பெத்த மனசு கேக்குமா? இருந்த நகை நட்டை எல்லாம் அடகு வச்சு ஒரு தேதியிலே பத்தாயிர ரூபா தந்தா. அண்ணைக்கி அவ தரல்லேண்ணு எங்க குடி தமானமாப் போயிருக்கும். என்னமோ பேசுறிக. இந்த நெலமையிலே கலியாணம் என்ன? காச்சி என்ன? ஊருக்கெல்லாம் பஞ்சாயத்துக்குப் போறிக. நீங்களே இந்த ஞாயத்தைச் சொல்லுங்க” என்று மூச்சு விடாமல் மங்கையாச்சி பேசி நிறுத்தினுர்கள்.

நம்மால் காரியம் கெட்டுப்போய் விடக்கூடாதே என்பதற்காக வந்தது முதல் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டிருந்த ஐயாவுக்கு இப்போது ஆத்திரம் கரை புரண்டது.

அதற்குக் காரணம்.

மங்கையாச்சியின் தாயார் வீடு, ஐயா வீட்டிற்கு நான்காவது வீடுதான். அந்தக் குடும்பத்தைப் பற்றி

ஐயா மிக நன்ருக அறிவார்கள். மங்கையாச்சியின் தகப்பனர் பெருஞ் சூதாடி. கழுவிய கை காய்வதற்கு முன்னுல் சீட்டுக் கொட்டகைக்கு ஓடுகிற பழக்கம் சிறு வயது முதலே அவருடன் ஒட்டி வளர்ந்து தொடர்ந்து வாழ்ந்து வருகிறது.

நகைகள் முதல் சாதாரணப் பாத்திரங்கள் வரை, இன்னதென்று அவருக்கொன்றும் வேறுபாடு இல்லே. எது கிடைத்தாலும் எடுத்து விற்றுவிடுவார். அன்ருடம் அங்கங்கே ஐந்தும் பத்தும் வாங்கி, குடும்பத்தை நடத்தவேண்டிய இக்கட்டான நிலேமையே அங்கே நீக்கமற நிலவியது. மங்கையாச்சியின் தாயார் பல நாட்கள் பிள்ளேச் சரட்டைப் போட்டுக்கொண்டு வாழும் காட்சிகளேயெல்லாம் ஐயா பார்த்திருக்கிருர். கொல்லன் தெருவில் ஊசி விற்கக்கூடாது என்று சொல்லுவார்கள். வண்ணுன் தெருவில் வெளுக்கத் துணி கேட்ட கதைபோல, ஐயாவிடமே மங்கையாச்சி தன் தாயாரின் பிரதாபங்களேச் சொன்னுல் அவர் களுக்கு ஆத்திரம் வாராமல் என்ன செய்யும்?

''மங்கை! நகைகளேயெல்லாம் அடகு வச்சு உனக்குப் பத்தாயிர ரூபா தந்தது யாருண்ணு சொன்னே?''

''ஏன்? எங்க ஆத்தா தான். அவ என்ன ஒண்ணு மில்லாதவளா? ஏய்யா எங்களே இப்படி கேவலப் படுத்துறிக?''

''கேவலம்கறது பிறத்தியாராலே உண்டானு நிலேக்காது. தானு ஏற்படுற கேவலம் நீங்காது. இதை நீ மறந்துறப்படாது ஆத்தா. உன் தாயாரு பத்தாயிர ரூபா தந்தாண்ணு ஒலகம் நம்பாது. அப்படி அது நம்புனுலும் நான் நம்பமாட்டேன். உங்க அப்பனேடே உங்க ஆத்தா போராடிப் போராடி, நகை நட்டெல் லாம் தொலச்சு எத்தனேயோ வருஷமாச்சு. நீ ஏங் கிட்டேயே கதை சொல்றே: நான் எம்புட்டோ கதை கேட்டவன் மங்கை! இப்போ அதைப் பத்தியெல்லாம் பேசி ஆகப்போறது ஒண்ணுமில்லே. காசி, ராமையா வோடே சேர்ந்து கடை வச்சு என்னபண்ணுனே? அதை நாம பேசவேண்டாம். ஆனு, கடையை வெட்டிக்கிறபோது, காசி நடந்துக்கிட்ட முறை சரியில் லேண்ணு சீதை ரொம்ப வருத்தப்பட்டா. அதனுலே, 'நான் ஒண்ணும் தவரு நடந்துக்கலே. அப்படி ஏதாச்சும் நடந்திருந்தேண்ணு அதை மனசுலே வச்சிக் காதிக' அப்படீண்ணு ராமையா கிட்டே காசி வந்து ஒரு வார்த்தை சொல்லிட்டாண்ணு மனத்தாங்கல்லாம் நீங்கிப்போகும். அதைச் சொல்லத்தான் நான் வந்தேன். புருசனும் பொண்டாட்டியும் வளச்சு வளச்சுப் பேசி என்னேச் சொல்லவே விடல்லே.''

''கேட்டிகள்ல. உங்களே ஐயா மன்னிப்புக் கேக்கச் சொல்ருக. இதுக்குத்தான் இம்புட்டுத் தூரம் வந்திருக்காக. மனசோடேயா நம்மளேக் கல்யாணத் துக்குக் கூப்புடுருக? மாமச் சடங்கு பண்றதுக்கு நீங்க வேணும். முறையாச் சொல்லி, கவுரவமாக் கூப்பிட்டா அவக பணக்கார மேட்டுமை குறைஞ்சுபோகும். அது னுலே ஐயாவைத் தூதுவுட்டிருக்காக. இவக அவக வீட்டுக்குப் போனு ஐயா ஐயாண்ணு கொஞ்சுவாக. வச்ச இடத்துலே வைக்காமெ தூக்குவாக. வகை வகையாப் பலகாரம் பண்ணிப் போடுவாக. அதுனுலே ஐயா அவகளுக்காக வந்திருக்காக. அதுக்காக நாம் மன்னிப்புக் கேக்க முடியுமா?''

மங்கையாச்சியின் தரக் குறைவான பேச்சைக் கேட்டதும், ஐயாவின் கண்கள் நெருப்பாய்ச் சிவந்தன.

சிவபிரான் திரிபுரத்தை எரித்தபோது அந்தப் பெருமானுடைய கண்கள் இப்படித்தான் சிவந்திருக்குமோ! என்று எண்ணும்படியாக சிவப்பழமான ஐயாவின் கண்கள் காட்சிதந்தன.

“டே, காசி! உன் பொண்டாட்டி பேசுனதைக் கேட்டியா? மனுசனுக்குப் பணம் வேண்டியதுதான், அதுக்காக மானம் ஈனத்தை வித்துப்புடப்படாது. என்னப்போல இரக்கப்பட்டவங்க பத்துப்பேருகிட்ட கெஞ்சிக் கூத்தாடி அஞ்சும் பத்துமா வாங்கித்தான் உன் மாமியா உன் பொண்டாட்டியை வளத்தா. இவ சொல்ரு நான் பலகாரத்துக்குப் பொசகெட்டவன்னு. அறுபது வயசுக்கு மேலே வாழ்க்கை நடத்திட்டேண்டா. ஆயிரக்கணக்கான பேருக்குச் சாப்பாடு போட்டிருக்கேன். நானும் பல பெரியவக வீட்டிலே சாப்பிட்டிருக்கேன். ஆனு இண்ணைக்கி ஒ வீட்டிலே கைநனச்சேனே அதுதாண்டா நான் செஞ்ச பாவம். ஏதோ ராமையா, சிதைங்கிற நல்லவங்களுக்காக வந்து செய்யக்கூடாத பாவத்தைச் செய்துட்டேன். அதனுலே பரவாயில்லே. இண்ணைக்கு இருக்கிற தில்லேடா வாழ்க்கை. நாளைக்கு என்ன நடக்கும்கறது தான் வாழ்க்கை. எல்லாரையும் கல்லுக்கட்டி சாந்தா பூசி வச்சிருக்கு? டே, காசிப் பயலே! எனக்கு விவரம் தெரிஞ்ச காலமா நான் சாமியைக் கும்பிட்டுக் கிட்டு வாரவன். என்னைப் பலகாரத்துக்குப் பொச கெட்டவன்னு உன் பொண்டாட்டி சொன்னுளே, அதுக்குப் பலனை ஆண்டவன் அவளுக்குக் கொடுக்காம விடமாட்டான். ஒத்துமைப்படுத்த வந்த நான் வேத்துமையாப் பேசப்படாது. ஆனு, எட்டிப் பழத்தை என்னதான் நினைச்சாலும் எலந்தப்பழமா ஆக்க முடியுமா? ஒரு கையினுலே எப்படிடா சத்தம் வரும்? ஒரு பக்கம் நினைச்சா எப்படிடா ஒத்துமை உண்டாகும்? ஆண்டவன் ஒருத்தன் இருக்காண்டா. நீ கணக்கெ மாத்தலாம். ஆனு நீ என்ன செஞ்செ? இவ என்ன செஞ்சா? நான் என்ன செஞ்சேன்? ராமையா என்ன செஞ்சான்? சீதை என்ன செஞ்சா? அப்படீன்னு அவன் எழுதுகிருன்பாரு அதை அழிரப்பராலே அழிச்சிற முடியாதுடா. அவன் பாத்துக்குவான். நான் போறேன்” என்று கூறிவிட்டு, துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு ஐயா வேகமாக எழுந்து வெளியே சென்ருர்கள்.

“இந்தக் கிழவன் வந்து என்ன இப்படிக் குதிச்சிட்டுப் போருன்” என்று மங்கையாச்சி கணவனைப் பார்த்து எகத்தாளமாகக் கூறினுர்கள். மனைவி மிகச் சிறப்பான ஒன்றைக் கூறிவிட்டதைப் போல, தலையை யாட்டிக்கொண்டே சிரித்த காசிச் செட்டியார் “விட்டுத் தள்ளுங்கறேன்” என்று குபாயத்தாகக் கூறினுர்கள்.

ஐயாவைக் கண்டதும் கண்ணுயிரம் ஓடிவந்தான். “என்னய்யா ஆச்சு” என்று ஆவலோடு அவன் கேட்டான். ஐயாவின் முகததை நன்ருகப் பார்த்திருந்தால் அவன் அப்படிக் கேட்டிருக்கமாட்டான். அதில் ஏமாற்றத்தின் சுவடுகள் நன்ருகப் பதிந்திருந்தன.

ஐயா மவுனமாகச் சென்று காரில் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். அவர்களின் மனநிலை சரியில்லை என்பதைக் கண்ணுயிரம் உணர்ந்தான். எனவே, பிறகு அவன் ஒன்றும் பேசாமல் காரிலேறி அமர்ந்து அதைச் செலுத்தத் தொடங்கினுன்.

# இரண்டு நாடுகளில் இருபது நாட்கள்

எம். அருணாசலம்

இரண்டாம் உலகப் போரில் பெரும் சின்னாபின்னமுற்ற ஜெர்மனி பெரும் பொருட் சேதத்திற்கும், ஆட் சேதத் திற்கும் உள்ளாகியது. ஆனால், இது ஜெர்மனிக்கு ஒரு வரப் பிரசாதம் என்றே கூறலாம். பழையன கழிந்து புதியன புகு வதற்கு ஓர் கருவியாக இருந்தது அப்போர். புதிய பல தொழிற் சாலைகள், நவீனப் படைப்புக்கள், புதிய முயற்சிகள் உருவாயின. ஆட் பற்றாக்குறையினால் இயந்திர யுகம் தோன்றியது. 'எங்கும் நீக்கமற நிறைந்த பராபரமே' என்பதுபோல் எத்துறையிலும், எங்கு நோக்கினும் இயந்திர மயத்தையே காண்கிறோம். குறைந்த ஆட்சக்தியில் நிறைந்த உற்பத்தியைப் பெறுகின்றனர் அந்நாட்டுமக்கள். வேளாண்மை, கால் நடைப் பண்ணை, கோழி வளர்ப்பு முதலியன எல்லாமே இயந்திர உதவியினாலே நடை பெறுகின்றன. நாங்கள் ஹாலே நகரிலிருந்து பெர்லின் வரும் வழியில் பல பண்ணைகளைக் கண்டு வியப்புற்றோம். சுமார் 600 ஏக்கர் பரப்பில் விவசாயம் செய்யும் கூட்டுப் பண்ணையினைக் கண்டோம். எங்கு பார்த்தாலும் பசுமை. உழுவது முதல் பயிர்களை அறுவடை செய்வது வரை எல்லாமே கருவிகள் தான். கையில் மண்படாமல் விவசாயம் செய்யலாம் என்பதனை அங்கு கண்டோம்.

பன்றி வளர்க்கும் பண்ணை களும், கால்நடைப் பண்ணைகளும் கோழிப் பண்ணைகளும் கண் கொள்ளாக் காட்சியாகும். ஒரு பொத்தானை அழுத்தினால் எந்த இடத்திற்குத்தீவனம்தேவையோ அங்கு தீவனம் கொட்டுகிறது. எங்கு நீர் வேண்டுமோ அங்கு அது தானாக வருகின்றது. அப் பண்ணைகளிலுள்ள பிராணிகள் எல்லாம் கொழு கொழுவென்று கண்ணிற்கும், நாவிற்கும் விருந் தாக அமைகின்றன. அவை களுக்கு அளிக்கும் ஆதரவைக் கண்டால் நாமும் அப்பிராணி களாகப் பிறந்திருக்கக் கூடாதா என்ற ஏக்கம் பலருக்கு ஏற்படு கிறது. நம் நாட்டில் மனிதர் களுக்குக்கூட இல்லாத பல வசதி கள் அப்பண்ணைகளில் கண்டோம். மறு பிறவி என்று ஒன்று உண்டென்றால் அடுத்த பிறவியில் ஜெர்மனியில் ஒரு கால் நடை யாகவோ, கோழியாகவோ, பிறக்கவேண்டும் என்று எங்களில் ஒரு அன்பர் கூறுவது என் காதில் விழுகிறது. ஆம்! அது உண்மை தான் என்று என் மனமும் ஆமோதித்தது.

ஆண்டில் ஒரு பகுதி உறை பனியில் மூழ்கியிருக்கும் நாடு

ஜெர்மனி. அந்நாட்களில் எல்லாம் வேண்டிய காய்கறிகள். பூக்களைப் பெற கண்ணாடித் தோட்டங்களை அமைத்துள்ளார் கள் அம்மக்கள். இங்கு பிளாஸ்டிக் கூடாரங்களில் காய்கறித் தோட்டங்களும், பூந்தோட்டங் களும் உருவாக்கப்படுகின்றன. தேவையான ஒளியைப் பல மின் விளக்குகள் தேவைக்கேற்பக் கொடுக்கின்றன. பொத்தானைத் தட்டினுல் கூடாரத்தில் மழை பொழிகின்றது. வேண்டிய அளவு வெப்பம் மின் இயக்கங் களினுல் பயிர்களுக்குக் கிடைக் கின்றன. இதனுல் ஆண்டு முழுவதும் காயகறிகளும், பூககளும் தடையில்லாமல் கிடைக்கின்றன. விஞ்ஞானத்தின் விந்தையே விந்தை!

சம வாய்ப்புடைய புதுமைப் பெண்கள் நிறைந்த நாடு ஜெர்மனி. அவர்கள் செய்யாத வேலைகள், பார்க்காத தொழில்கள் இல்லை என்றே கூறலாம். தொழிற்சாலைகளில் பல இயந் திரங்களை இயக்குதல், பேருந்து, லாரி, டிராம், ரயில் முதலிய வாகனங்கள் ஓட்டுதல், பொறி யியல், டாக்டர்பட்டம் பெற்றுத் தொழில் புரிதல், பெரும் நிறுவனங்களை நிர்வகித்தல், பல கூட்டுறவு அங்காடிகளை நடத்து தல் முதலிய எல்லாத் துறை களிலும் பெண்கள் பணி புரி கின்றனர். நூற்றிற்கு மேலும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் பெண்கள் என்றறிந்தோம். பணி புரியும் பெண்களுக்குப் பேறுகால வசதிகளும், குழந்தையைப் பராமரிக்கும் விடுதிகளும் எல்லாத் தொழில் நிறுவனங் களிலும் உள்ளன. அதனுல் மகளிர் தடையின்றிப் பணி யாற்ற முடிகிறது. இங்குள்ள பெணகள் அழகாகவும், திறமை யாகவும், உழைப்பாளிகளாகவும் உள்ளார்கள். இல்லறத்தையே பெரிதும் விரும்புகிருர்கள். 18 வயது முதல் 22 வயதிற்குள் பெரும்பாலும் திருமணங்கள் நிகழ்கின்றன.

ஜெர்மனியில் கண்ட புதுமை அங்குள்ள மக்களுக்குத் திரைப் படக் கலைஞர்களின் பேரில் அலாதி மோகம் இல்லாமை ஆகும். அங்கு அவர்கள் சாதா ரண மக்களாகவே கருதப்படு கிருர்கள். செல்வாக்கு சிறப்பு எல்லாம் அங்கு அரசியல் தலைவர் களுக்கே. மாவட்டம் முதல் மாநிலம் வரையில் நாடெங்கி லும் கட்சித் தலைவர்களுக்கு மக்கள் மதிப்புக் கொடுக் கிருர்கள்.

ஜெர்மனி மக்கள் கடும் உழைப் பாளிகள். கடமையில் கண்ணும் கருத்தும் உடையவர்கள். நல்ல திறமைசாலிகள் என்பதனை என் பயணத்தில் கண்டேன். இயற்கை வளமும், அதனை மனித சமுதா யத்திற்கு ஏற்ற வகையில் பயன் படுத்தி வளம் பெறும் அறிவுத் திறனும் ஒரு சேர அங்கு மிளிர் வதைக் கண்ணுற்றேன். உலகப் போரில் சிதைந்த அவர்கள் நாடு மிகவும் குறுகிய காலத்தில் முன் னேறியதன் உண்மைகளை உணர்ந்தேன். அவர்கள் வாழ் வில் வளம் கொழிப்பதில் தவ றென்ன என்னும் சிந்தனையுடன் உலகின் தனிப்பெரும் நாடான ரஷ்யாவின் சாதனைகளை கண் டறிய பெர்லினிலிருந்து மாஸ்கோ பயணமானேன்.

ஜெர்மனியைப் போலன்றி சோவியத் ரஷ்யா பரப்பிலும், மக்கட் தொகையிலும் விரிந்த, பரந்த நாடு. அமெரிக்காவைப் போல் இரண்டரை மடங்கும் இந்தியாவைப்போல் ஏழு மடங் கும், ஜப்பானைப்போல் அறுபது மடங்கும் பெரியது ரஷ்யா. உல கிலேயே சீனுவிற்கும், இந்தியா விற்கும் அடுத்தபடி மக்கட் தொகையில் மூன்ருவது பெரிய நாடு. சுமார் 25 கோடி மக்களைக் கொண்டது. பல மாநிலங்கள் ஒன்று சேர்ந்த பல்வேறு வகைப் பட்ட மக்களின் கூட்டானது

சோவியத் ரஷ்யா. காலமின்மை யால் மிகவும் குறிப்பிட்ட நகரங் களையும், இடங்களையுமே இங்கு நாங்கள் பார்க்க முடிந்தது.

மாஸ்கோவிலிருந்து முதலில் நாங்கள் சென்றது லெனின் கிராட். இது இரண்டாவது பெரிய நகரம். இரவு ரயில் பய ணம் மிகவும் சொகுசாக இருந் தது. அங்கு இரவு ரயிலில் எல் லாப் பெட்டிகளுமே தூங்கும் வசதிகளுடையவை. சத்தமும், அதிர்ச்சியும் இல்லாததால் பய ணம் இதமாக இருக்கிறது. மூன்றே வகுப்புகள். முதல் வகுப்பு இருபடுக்கை வசதி, இரண் டாம் வகுப்பு நான்கு படுக்கை வசதி, மூன்றும் வகுப்பு நான்கு படுக்கை வசதி. முதல் வகுப்பு இரு படுக்கை வசதியுள்ள பெட்டி யிலே நாங்கள் பயணம் செய் தது. தலையணை, கொசுவலை, மென்மையான மெத்தை, விரிப்பு கள், கம்பளங்கள் முதலிய எல்லா வசதிகளும் உள்ளன. அதனுல் பயணம் இனிதாவதில் வியப் பென்ன?

ரஷ்யாவின் முன்னைய தலை நகரம் லெனின்கிராட். ஜார் மன் னர்கள் ஆட்சி இங்கிருந்தே நடைபெற்றது. அதனுல் இந் நகரம் மிகவும்தொன்மையானது. அரண்மனைகள் நிறைந்தது. சரித்திரப் பிரசித்தி பெற்றது. 129 அரண்மனைகள் உள்ளன வென்ருல் அதன் பெருமையை நீங்கள் புரிந்து கொள்ளலாம். நெப்போலியனை முறியடித்து வெற்றி கொண்டு ஜார் மன்னர் ஆட்சி அகல அக்டோபர் புரட்சி நடத்திய நகரமென்ருல் அதன் சரித்திர முக்கியத்துவம் கூறத் தேவையில்லை. 250 ஆண்டுகளுக்கு முன் நிர்மாணிக்கப்பட்ட பல மாளிகைகள் இன்றைய புதிய கட்டிடக் கலைக்குச் சவால் விடு கின்றனவென்ருல் அதன் தொன் மையினை நீங்கள் அறிவீர்கள். பல பெருந் தொழிற்சாலைகளுக் கும், கலைக்கூடங்களுக்கும் பெயர் பெற்றது இந்நகரம்.

ரஷ்யாவில் எதற்குப் பஞ்ச மேற்பட்டாலும் பொருட்காட்சி களுக்கும் (மியூசியம்) சதுக்கங் களுக்கும் (ஸ்கொயர்) குறைவே கிடையாது. லெனின்கிராடில் 50 பொருட்காட்சிச் சாலைகள் என்ருல் மாஸ்கோவைப் பற்றிக் கூற வேண்டுவதில்லை. ஏனே ரஷ்யர்களுக்கு அப் பொருட் காட்சியில் அலாதி மோகம்! அது வும் ஒருவழிக்கு நன்மையே. பின் வரும் சந்ததியினர் முன்னேர் களைப்பற்றியும், அவர்களின் வாழ்க்கையினைப்பற்றியும், அவர் கள் காலத்தைப்பற்றியும் அறிந்து கொள்ள மிகவும் பய னுடையவையாக உள்ளன அக்காட்சிகள்.

மாபெரும் மன்னன் பீட்டரால் 1704 ஆம் ஆண்டில் உருவாக் கப்பட்ட மாளிகை 'அட்மிரா லிடி' என அழைக்கப்படுகிறது. இங்கு கடற்படையின் பெரு மிதத்தை விளக்கும் வேலைப் பாடுகள் நிறைந்த 56 சிற் பங்களைக் கண்டோம். டிசம்

---



---

பரிஸ்ட் சதுக்கத்திலிருந்துதான் ஜார் ஆட்சியினை எதிர்த்து ரஷ்யப் புரட்சி வீரர்கள் புறப் பட்டார்கள். அதனால் அந்த இடத்தை மிகவும் போற்றிப் பாதுகாக்கிறார்கள். அங்குதான் வெண்கலத்திலான குதிரை வீரனின் சிலை அழகு செய்கிறது. ரஷ்ய மன்னர்களின் குளிர்க்கால அரண்மனை அவசியம் பார்க்க வேண்டிய ஒன்றாகும். அரண்மனை சதுக்கத்தின் பெயர்வரக் காரண மான மாளிகை. இச் சதுக்கத்தின் மத்தியில் மாவீரன் நெப்போலி யன் வெற்றி கண்டதற்கு அடை யாளமாக 160 அடி உயரமுடைய அலெக்சாண்டரியன் காலம் என்னும் வெற்றித் தூணும், அலங்கார வளைவும் உள்ளன. 'ஹெர்மிடேஜ்' என்னும் காட்சி சாலை, கலைக்கூடம் தவறாது காண வேண்டியதாகும். இது நான்கு கட்டிடங்களிலும் குளிர் கால அரண்மனையிலும் உள்ளது. எல்லாக் காலங்களிலும் இருந்த பல்வேறு மக்களின் கலாச்சாரம், கலை, பண்பாட்டினை விளக்கும் 20 லட்சம் பொருட்கள் சுமார் 325 அறைகள் நிறைய உள்ளன என்றால் அதன் பெருமையினைக் கூறவும் முடியுமோ? 5000 ஆண்டு களுக்கு மேற்பட்ட பொருட் களும் அணி செய்கின்றன. குளிர் காலத்தில் அரண்மனை முழுவதும் வெப்பச் சாதனங்கள் மூலம் கத கதப்பாக உள்ளன. இங்கு குளிர்ச் சாதனம் செய்வதுபோல் அங்கு வெப்பச் சாதனங்கள் உள்ளன. ஆங்காங்கு பூங்காக்கள் நகருக்கு அணி செய்கின்றன. தொன்மை வாய்ந்த ஒரு நகரம் இன்று புதுமை பெற்றுத் திகழ்கிற

தென்று கூறினல் அது மிகை யாகாது.

அடுத்து நாங்கள் சென்றது ரஷ்யத் தலைநகரான மாஸ்கோ. 65 லட்சம் மக்கட் தொகை கொண்ட இந் நகரம் நாளும் வளர்ந்த வண்ணமாக உள்ளது. அங்குக் கட்டிடங்கள் உருவாகும் வேகத்தினை வேறு எங்கும் கண்டதில்லை. ஒவ்வொரு நாளும் 350 குடியிருப்புப் பகுதிகள் கட்டப் படுகின்றன என்ருல் அசுரவேகம் என்றே கூற வேண்டும்.

நாலரை லட்சம் மாணவர்கள் பயிலும் 80 கல்லூரிகளும், 150 பொருட் காட்சிச் சாலைகளும், 40 அரங்குகளும், நூற்றுக்குமதிக மான கிளப்புகளும், கலைக் கூடங் களும், பல பெருந் தொழிற்சாலை களும் நிறைந்தது இந் நகரம்.

இங்கு மிகவும் முக்கியமாகக் காண வேண்டியவை கிரெம்ளின் பகுதி; செஞ்சதுக்கம், கோர்ச்சி தெரு, லெனின்சதுக்கம், லெனின் மலைகள், பொருளாதார சாதனைப் பொருட்காட்சி, மெட்ரோ என்னும் பாதாள ரயில், மாஸ்கோவா நதியில் படகுப் பயணம் முதலியன.

கிரெம்ளின் நகரின் மையத்தில் உள்ள முக்கோணவடிவமான பகுதியாகும். அரசினரின் முக்கிய அலுவலகங்கள் இங்கேதான் உள்ளன. கிரெம்ளின் மாளிகை யும் அதிலுள்ள காட்சிப்பொருட் களும் அனைவரும் பார்க்க வேண்டிய ஒன்ருகும். தங்கக் கோபுரங்கள் நிறைந்த கிரெம்ளின் மாளிகை பல மைல் களுக்கு அப்பாலும் பளிச்சிடு கின்றன. இக் காட்சியில் 17 அடி உயரம் 200 டன் எடை உள்ள 1735 ஆம் ஆண்டில் உருவான மிகப் பெரிய மணி காணத் தக்கது. ஒரு பெருந் தீ விபத்தில் சேதமாகிய இம் மணியின் ஒரு துண்டு(11 டன் எடை) தனியாக உள்ளது.

ரஷ்ய வரலாற்றில் சம்பந்தப் பட்ட முக்கியமான பொருட்கள் ஒரு காட்சிச் சாலையையும், ரஷ்ய அரசிற்கு பிற நாடுகள் வழங்கிய பரிசுப் பொருட்களும், ரஷ்ய போர்க் கருவிகளும், கண்டுபிடிப் புக்களும் காட்சிச் சாலைகளை அலங்கரிக்கின்றன.

பளிங்கு, கண்ணுடி, அலுமினி யம் முதலிய பொருட்களைக் கொண்டு புதிய கட்டிடக் கலைப் பாணியுடன் நிர்மாணிக்கப் பட்ட 'ட்ராய்ட்ஸ் கயா டவர்' 60:0 பேர் அமரக் கூடிய காங் கிரஸ் அரண்மனையாகும். இங்கு கட்சி மாநாடுகள், சர்வதேச மாநாடுகள், பாலே நடனக் காட்சிகள், ஆப்பாராக்கள், திரைப்படக் காட்சிகள் முதலி யன நடத்த வசதிகள் உள்ளன.

இனி நாம் கிரெம்ளினிலிருந்து செஞ்சதுக்கம் செல்வோம். இங்கு புகழ்பெற்ற போராட்டங்களும், வரலாற்றுச், சிறப்புமிக்க புரட்சி களும் நிகழ்ந்துள்ளன. இப்போது பல பொது நிகழ்ச்சிகளும், அணி வகுப்புக்களும் திருவிழாக்களும் இங்கு நிகழ்கின்றன. லெனின் உடல் இங்குதான் பாதுகாக்கப் படுகிறது. பல ரஷ்யப் பெருந் தலைவர்களின் சமாதியும் இங்கு தான் உள்ளது. பல தொன்மை யான மாளிகைகளும், சிற்ப வேலைப்பாடுகளமைந்த கட்டிடங் களும் அழகு செய்கின்றன. ஒரு பக்கம் 16 ஆம் நூற்ருண்டின் புராதனமான தேவாலயம். மறு பக்கம் மிகப் பெரிய சிறப்பு அங்காடி. 4000 பேர் பணிபுரியும் இதில் ஒன்றரை லட்சம் வாடிக்கையாளர்கள் தினமும் வந்து செல்கிருர்கள் என்ருல் அதனை எப்படி விளக்குவது? மற்ருெரு பக்கம் வரலாற்றுப் பொருட்காட்சி.

அடுத்து புரட்சிகளின் ஞாப கார்த்தமாக விளங்கும் புரட்சிச் சதுக்கம் வருகின்ருேம், அங்கு

தான் மத்திய லெனின் பொருட் காட்சிச்சாலே,லெனின்வாழ்க்கை வரலாறு புகைப் படங்கள், சாச கன்னங்கள், சொல்லோவியங் அவரது உவமைகள் முதலியகன, இடம் பெற்றுள்ளன. லெனின் நிரைப் படக் காட்சியும் உண்டு. லெனின் புகழ் பாடும் இம்மா பெரும்செவ்வகம்லெனினின்திரத் தையும், வீரத்தையும் ஒரு காவிய மாக நமக்குக் காட்டுகிறது. உழைப்பின் உயர்வை மக்கள் சமு தாயத்தின் சக்தியை நமக்குச் சொல்லாமல் உணர்த்துகிறது. ஒவ்வொரு மனிதனும் பார்த்துக் கற்றுக் கொள்ள வேண்டியது இங்கு நிறைய உண்டு.

கம்பீரத்திலும், கலையழகிலும் பழமையிலும் மிளிர்ந்து விளங்கும் போல்ஷாய் அரங்கம் ஒவ்வொருவரும் காணத்தவருத தாகும். ஐந்து அடுக்குகள் கொண்ட இவ்வரங்கத்தில் 2300 பேர் அமரவும், ஒளி, ஒலியமைப் பில் நவீன வசதிகள் படைத்தது மாகும். இங்கும் நடைபெறும் பாலே நடனங்கள், ஆப்பரா இசை நிகழ்ச்சிகள் உலகப் பிரசித்திப் பெற்றவை.

மாஸ்கோ நகரின் முக்கிய கடைத் தெரு, கோர்ச்சி தெரு. பழமையான தெரு புதிதாக அகலப் படுத்தப் பட்டு சிறந்து விளங்குகிறது. கவிஞர் புஷ்கின், கவுஞர் மாயகோவ்ஸ்ஜி சிங்கள் அவர்கள் பெயர்கள் தாங்கிய சதுக்கங்களை அலங்கரிக்கின்றன.

லெனின் குன்றுகளில் மாஸ்கோ பல்கலைக் கழகம் 420 ஏக்கர் பரப்பில் பூங்காக்கள் சூழ சுமார் 40 கட்டிடங்களில் அமைந்துள் ளது. அதில் ஒன்று 32 மாடிகள் கொண்டது 950அடிஉயரமாகும். 50 நாடுகளிலிருந்து வந்துள்ள 1500 மாணவர்களும் 45,000 உள் நாட்டு மாணவர்களும் இங்கு பயில்கிறுர்கள். 2800பேரா

சிரியர்களும் 1700 ஆய்வுக் கூடங்களும் 214 அரங்குகளும் 6000 பேர் தங்கும் விடுதிகளும் இங்கு உள்ளன. 700 அடி உயரமுள்ள இக்குன்றின் மீது இருந்துகாணும் நகரின் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். லட்சம் பேர் அமரக் கூடியலெனின்ஸ்டேடியம் அருகிலேயே உள்ளது.

பொருளாதார சாதனைக் கண்காட்சி அனைவரும் காண வேண்டிய ஒன்றாகும். 500 ஏக்கர் பரப்பளவில் 300 கட்டிடங்களில் இடம் பெற்றிருக்கும் இக்காட்சியில் ஒவ்வொரு மாநிலமும் மற்றும் பெருந்தொழில் நிலையங்களும் பங்கு பெற்றுள்ளன. புதிய கண்டுபிடிப்புக்கள், இயந்திரச் சாதனங்கள், விண்வெளி ராக்கெட்டுகள், ஸ்புட்னிக் ஆகியவற்றின் முழு உருவங்கள் விஞ்ஞானச் சாதனைகள் முதலியவற்றைஇங்கு காணலாம். பூங்காக்களும் நீரூற்றுக்களும் வண்ண மின் விளக்குகளும் இக் காட்சிக்கு மேலும் அழகூட்டுகின்றன.

'மெட்ரோ' என்னும் பாதாள ரயில் இங்கு மிகவும் பெயர் பெற்றது. இந் நிலையங்களுக்குச் செல்லும் படிகள் 'எஸ்கலேட்டர்' என்னும் முறையில் அமைக்கப் பட்டுள்ளன. நாம் படிகளை ஏறிக் கடக்காமல் சுழன்று வரும் படிகளில் நின்றவுடன் தானாகவே நம்மை அப்படிகள் தாங்கிச் செல்லுகின்றன. இது ஒருபுதுமையான அனுபவமாகும். ஒவ்வொரு நிலையமும் வெவ்வேறு விதமாக அந்நாட்டு மக்களின் கலாச்சாரப் பிரதிபலிப்பாக அமைக்கப்பட்டிருப்பது போற்றுதற்குரியதாகும்.

இவை தவிர அங்கு போக்குவரத்திற்கு டிராம், பஸ், டிராலி பஸ் (இருபஸ்கள் ஒன்று சேர்ந்தது), வாடகைக் கார்கள் முதலியனவும் ஆற்றில் விசைப் படகு, டிராலிப்படகு, சுற்றுலாப் படகு முதலியனவும் பயன் படுத்தப் படுகின்றன.

இங்குள்ள டெலிவிஷன் நிலைய உச்சியிலிருந்து நகரின் காட்சி காண்பரியதொன்று. 1000 அடி உயரமுள்ள இதன் உச்சியை லிப்ட் மூலம் சில நிமிடங்களில் அடையலாம்.

லெனின் சதுக்கத்தில் பெரிய வாயில் உள்ள லெனின் இல்லத்தில் காவலாளிகள் ஒரு மணிக்கு ஒரு முறை மாறும் காட்சி லண்டனில் பக்கிங்காம் அரண்மனையில் நாள்தோறும் கடமை மாற்றும் காவலாளிகளை நினைவூட்டுகிறது. டக்...டக்... என்ற ஒலிமட்டும் எங்கிருந்தோ கேட்கிறது. இரு காவலாளிகள் இரு பக்கங்களிலிருந்தும் வந்து முன்காவலிலுள்ள காவலாளியிடமிருந்து சாவி பெறும்போது சரியாக கெடிகாரத்தில் மணி அடிக்கிறது. அவ்வளவு கணக்காக அந் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

ஒவ்வொரு குழந்தைகளுக்கும் பிறந்த ஆறு மாதங்களுக்குப் பிறகு குடியுரிமை வழங்கும் விழாஅவ்வூர்த் தலைவர் அல்லது ஷெரீப் முன்னிலையில் நடைபெறுகின்றது. அவ் விழாவில் உறவினர்களும், நண்பர்களும் பங்கு கொண்டு மலர்க்கொத்துக்களை குழந்தைகளுக்கு அளிக்கின்றனர். பின்னர் அதன் பெற்றோர்களுக்கு 500 ரூபிள் இனாமும், குழந்தைக்குரிய அரசினர் அடையாளச் சீட்டும் தலைவரினால் வழங்கப்படுகிறது. குழந்தைகளின் கல்விச் செலவைச்

சரிகட்ட பெற்றோரின் வருமானத்திற்கேற்ப ஒரு பகுதியினைப் பிடித்து அரசினர் கட்டாயக் கல்வி கற்பிக்கின்றனர்.

ரஷ்யாவில் பெருந் தொழில்கள் நன்கு வளர்ந்துள்ளன. அரசினர் பண்ணைகளும் கூட்டுப் பண்ணைகளும் இயந்திர முறையில் வேளாண்மையை வளர்க்கின்றன. ஆனால் நுகரும் பொருட்கள் இன்னும் அந்நாட்டின் தேவைக்கு ஏற்ப வளரவில்லை. அத்துறையில் இப்போது ரஷ்யா அக்கறை காட்டி வருகிறது. வீடு கட்டும் துறையில் அது மிகவும் முன்னணியில் உள்ளது. ஏழாண்டுத் திட்டத்தில் ஒரு குடும்பத்திற்கு ஒரு வீடு கிடைக்குமெனச் சொன்னார்கள்.

ரஷ்யர்கள் திடகாத்திரர்களாகவும் ஆணும் பெண்ணும் கடும் உழைப்பாளிகளாகவும் நாட்டுப் பற்றுடையவர்களாகவும் உள்ளனர். இயற்கை வளமும் உழைப்பும் ஒரு சேர முன்னேற்றம் காண்பதால் தடை என்ன? அம்முறையைப் பின்பற்றி நாமும் வளர வேண்டும். இதுவே இப்பயணத்தின் மூலம் நான் காணும் கனவு.






சென்னை-14 நாவல் ஆர்ட் பிரிண்டர்சில் அச்சிடப்பெற்று சேது நிலையத்திற்காக வெளியிடுபவர் பழ. சேது ஆச்சி, 12, ராமாநுசம் தெரு, சென்னை-17 தமிழ்நாடு. ஆசிரியர் : புலவர்நாகசண்முகம்.